309-A
151



# நீதிபதி

130

இளங்கீரன்

MOHANKUMAR & CO.
66, 1/5 First Cross Street,
COLOMBO. 11



கலைச்சோலை நிலையம்
கடைவீதி..... துறையூர்..... திருச்சி மாவட்டம்

# முதல் வெளியீடு!

பட்டம் பெற்றோர், பல்கலை பயின்றோர், பண்டிதர், படித்தவர் — ஆகியோரிடையேதான் படிக்கும் ஆர்வம் இருந்து வந்தது, "இலக்கியம்' என்ற சொல் அவர்களிடையேதான் நடமாடியது. அது ஒரு காலம்.

ஆனால்,

இன்றைய விழிப்புற்ற தமிழகத்திலே பாமர மக்களிடையேகூட படிக்கும் ஆர்வம், நூல் வாங்கும் வழக்கம் வேகமாக பரவி வருகிறது. இதற்குக் காரணம் வேகமாக வளர்ந்து வரும் மறுமலர்ச்சி இலக்கியம்தான்.

புத்தம் புதிய கருத்துக்கள் — சிந்தனைக் குவியல்கள் தமிழ் மக்களிடையே படையெடுத்திருக் கின்றன என்பதற்கு எடுத்துக்காட்டாக ஏராள மான கதைகள், நாவல்கள், நாடகங்கள் நாடெங்கும் பவனி வருகின்றன. இவைகளை, கண்ணையும் கருத் தையும் கவரும் முறையிலே உருவாக்கி மக்களின் கரங்களிலே தவழ விடும் வெளியீட்டகங்களும் ஏராளமாக இருக்கின்றன இந்த நாட்டிலே

இந்த சூழ்நிலையில் முற்போக்கு எழுத்தாளர் களின் சிந்தனைச் செல்வங்களை நல்ல முறையில் நாட்டு மக்களுக்கு நூல்வடிவில் ஆக்கித்தரவேண்டும் என்ற ஆர்வத்தால் தூண்டப்பெற்று " கலைச்சோலை நிலையத்தை " ஆரம்பித்திருக்கிறோம். எமது முதல் வெளியீடாக, இலக்கிய உலகில் விரைந்து முன் னேறும் முற்போக்கு எழுத்தாளரான தோழர் இளங்கீரனின் "**நீதிபதி**"யை உங்கள் கரங்களிலே

தவழவிட்டிருக்கிறோம், எங்கள் இலக்கியப் பணிக்கு உங்கள் பேராதரவு என்றுமிருக்கும் என்ற நம்பிக்கையுடன்.

இந்நூலுக்கு அழகிய முறையில் முகப்புப் படம் வரைந்து தந்த ஓவியர் கே. வி. ஈஸ்வரனுக்கு எமது நன்றி. வணக்கம்.

கலைச்சோலை நிலையம்,
துறையூர்.

அன்பன்,
**ப. சிதம்பரம்.**

★

## ஆசிரியரின் இதர நூல்கள்

★

1. பைத்தியக்காரி
2. பொற்கூண்டு
3. மீண்டும் வந்தாள்
4. காதலன்
5. மரணக்குழி
6. ஒரே அணைப்பு
7. கலாராணி
8. காதல் உலகிலே
9. அழகு ரோஜா
10. பட்டினித் தோட்டம்
11. வண்ணக் குமரி
12. ஆணும்—பெண்ணும்



# என்னுரை.

இக் கதையை படித்து முடித்ததும் என்னைப் பாராட்டாவிட்டாலும், இதில் வரும் பாரிஸ்டர் பரமானந்தனை நிச்சயம் பாராட்டு வீர்கள்.

பணம், பட்டம், பதவி, பகட்டு, படாடோபம், உயர்ந்த அந்தஸ்து — இவைகளுக் குள்ளே ஒளிந்து வாழும் சிறுமைத்தனம், கொக்கரிக்கும் கொடுமைகள், நேர்மையற்ற செயல்கள், ஒழுக்க யீனங்கள் - இவைகளை இழுத்துவந்து மக்கள் முன் நிறுத்தும் பாரிஸ்டர் பரமானந்தனைப் பாராட்டமலிருக்க முடியுமா?

ஒரு ஏழைப் பெண்ணுக்குத் துரோகம் செய்து, தன் வாழ்வை மட்டும் வசந்தமாக்கிக் கொண்ட ஒரு வஞ்சகன்,

உயர்ந்த அந்தஸ்தில் உள்ள ஒருவனின் துரோகத்தால் விபசாரக் குட்டையில் நெளிந்த ஒரு நேரிழையாள்,

கண்ணியவான் என்று பெயர் பெற்று, கருணைவாய்ந்தவர், கடவுள் பக்தர், என்று போற்றப்பட்டு, பரோபகாரி என்று பட்டம் தாங்கி, சொந்த வாழ்க்கையிலே சூதும், அக்கிரமும் கொண்டு வாழ்ந்த ஒரு வெளிவேஷக்காரன்,

பணத் திமிரினால் பாவையர் பலரின் வாழ்க்கையில் இருளைப் படரவிட்டு கடைசியில் கொலைகாரனாக மாறிவிட்ட ஒரு மைனர்,

குள்ள மனப்பான்மையினரால் கொலை செய்யப்பட்ட ஒரு கொள்கை வீரன்,

அண்ணனைத் தேடி அனாதையாகத் திரிந்த ஒரு ஆரணங்கு,

தாயின் சபதத்தை நிறைவேற்றி தன் இலட்சியத்தைப் பூர்த்தி செய்து கொண்ட தனயன் ஒருவன்,

இத்தனை பேர்களையும் நீதிமன்றத்துக்கு முன்னால் அறிமுகப்படுத்துகிறான் பாரிஸ்டர் பரமானந்தன். அவர்களுடைய வாழ்க்கையில் நடந்த மோசடிகளை, ஏமாற்றங்களை எடுத்துக் காட்டுகிறான்.

இதையெல்லாம் நீதிமன்றத்திலே எடுத்துக் காட்ட வாய்ப்பு இருக்கிறதா என்று என்னைக் கேட்காதீர்கள். நீதிபதி குணசேகரம் பிள்ளையைக் கேளுங்கள்.

**இளங்கீரன்.**

# "நீதிபதி"

★

## வழக்கு

மதுரை காமராசர் பல்கலை
அன்பளிப்பு
தி. க. சண்முகசுந்தரம்
தமிழியல்துறை

நீதிபதி சொல்கிறார்:

செஷன்ஸ் கோர்ட் ஆரம்பமானதும், முதலில் அந்த வழக்கை விசாரணைக்கு எடுத்தேன். அது ஒரு கொலை சம்பந்தப்பட்ட கேஸ். ஒரு இளைஞனைக் கொலை செய்து விட்டாள் என்று ஒரு அழகிய இளம் பெண் குற்றஞ் சாட்டப்பட்டு கூண்டிலே நிறுத்தப்பட்டிருந்தாள். கொலையுண்டது வேறு யாருமல்ல, என் மைத்துனன் மகாலிங்கமே!

கூண்டிலே நின்ற பெண்ணைப் பார்த்தேன். எழிலும், இளமையும் கொண்ட அவளை, நான் எங்கேயோ பார்த்தமாதிரி இருந்தது. சில விநாடிகள் சிந்தித்துப் பார்த்தேன். நினைவு வரவில்லை......! கண்ணாடிக்குள்ளிருந்த எனது கரிய விழிகளிரண்டும் அவளுடைய அழகிய முகத்தை ஊடுருவிப் பார்த்தன. ஆனால் அடையாளம் காணமுடியவில்லை! என்றாலும் அவளை எங்கேயோ பார்த்திருக்கிறோம் என்று மனசு அடித்துக்கொண்டது. இவள் சாயலை ஒத்த வேறு எந்தப் பெண்ணையாவது பார்த்திருக்கலாம்....... இவளைப் போல பலர் இருக்கலாம்.......!-என்று சமாதானம் செய்து கொண்டு விசாரணையைத் துவங்கினேன்.

போலீஸ் தரப்புச் சாட்சியங்கள் சுருக்கமாக இருந்தன. விசாரிக்கப்பட்டவர்களும் ஒரு சிலர்தான். ஆனால் எதிரி தரப்பில் ஒரு சாட்சிகூட இல்லை!

போலீஸாரின் சாட்சியங்கள் அத்தனையும் அந்தப் பெண்தான் கொலை செய்தாள் என்று கூறின. குற்றஞ் சாட்டப்பட்ட அந்தப் பெண்ணும் அதை மறுக்கவில்லை! "நான்தான் கொலை செய்தேன்!"—என்றும் கூறினள். இதில், சிந்திக்கவேண்டியதும், ஆச்சர்யப்படவேண்டியது மான ஒரு விஷயம் இருந்தது. அதுதான், "நான்தான் கொலை செய்தேன்"—என்பதைத் தவிர, வேறு ஒரு வார்த்தைகூட அவள் சொல்லவில்லை; சொல்லவும் மறுத்துவிட்டாள்; மௌனம்தான் அவள் தந்த பதில், "நான்தான் கொலை செய்தேன்" என்பதைத் தவிர.

போலீஸாரின் சாட்சியங்களையும், அவளுடைய ஒப்புதலையும் வைத்துக்கொண்டு தீர்ப்பைச் சொல்லுவதா? அல்லது........!

என் மனம் சிறிது குழம்பியது. அந்தப் பெண் ஏன் மௌனமாக இருக்கிறுள்? அவள் ஏன் கொலை செய்தாள்? —இந்தக் கேள்விகள் என்னுள்ளத்தில் எழாமலில்லை. இந்தக் கேள்விகள் அவளைப்பற்றிய விஷயங்களை அறிய வேண்டுமென்ற ஆவலைக் கிளப்பிற்று. ஆனல்—

அவள் மௌனமாகவே நின்றுள்....! நான் ஒன்றுமே தீர்மானிக்காமல் வந்துவிட்டேன்.

## முதல் நாள்

மறுநாள் கோர்ட்டுக்கு வந்து என் ஆசனத்தில் அமர்ந்தேன். அப்போதும், நான் ஒரு தீர்மானத்துக்கு வரவில்லை. ஆனல் அன்றைக்கு எப்படியாவது தீர்ப்புச் சொல்லிவிடவேண்டுமென்று தீர்மானம் செய்துகொண்டேன்.

திடீரென்று பாரிஸ்டர் பரமானந்தன் எழுந்தார். அடுத்த விநாடி "மைலார்ட்!" என்று அவருடைய கம்பீரமான குரல் கோர்ட் ஹாலெங்கும் ஒலித்தது. நான் கேள்விக்குறியுடன் அவரைப் பார்த்தேன்.

"தீர்ப்பெழுதுவதற்கு முன்னுல், எதிரியின் சார்பில் சில விஷயங்களைச் சொல்லவேண்டியிருக்கிறது!"

அவர் இப்படிக் கூறியதும் எனக்கு ஒரே ஆச்சர்யமாக இருந்தது. முதல் நாள் விசாரணை நடந்து கொண்டிருந்தபோது, அதைக் கவனித்துக்கொண்டிருந்தார் பாரிஸ்டர். ஆனுல் ஒரு வார்த்தைகூட அவர் சொல்லவில்லை. அவர் சொல்லவும் அவசியமில்லைதான். இந்தக் கேஸுக்கும் அவருக்கும் ஒருவித சம்பந்தமுமில்லை. ஆனுல் இப்போது...... ?

சில விநாடிகள் சிந்தித்தேன். பரமானந்தன் அனுவசியமாக எதிலும் தலையிடமாட்டார். அவர் எந்த வழக்கில் ஆஜரானுலும், அந்த வழக்கு முக்கியமானதாகவும், சிக்கல் உள்ளதாகவும் இருக்கும். ஆனுல் அந்த சிக்கலை விடுவித்து நீதிபதியின் சிந்தனைக்குச் சிறிது ஓய்வு கொடுக்கும் திறமையுள்ளவர். வயதில் இளைஞராக இருந்தாலும் அறிவும் விவேகமும் உள்ளவர். அவருடைய திறமைக்குப் பெயரும் புகழும் தானுக வந்தன. அவருடைய பெயர் எல்லாருக்கும் தெரியும். ஆனுல், அனுதை ஒருவனைப்பற்றி இவர் என்ன தெரிந்திருக்கப்போகிறுர்.... தவிரவும் எதிரியின் தரப்பில் வாதாடுவதற்கு வக்காலத்து மனுகூட சமர்ப்பிக்கவில்லையே......!

"மிஸ்டர் பரமானந்தன் நீங்கள் எதிரியின் தரப்பில்..."!

"வாதாட வரவில்லை இப்போது. எனவேதான் நான் யாரையும் குறுக்கு விசாரணை செய்யவோ, கேஸை நடத்தவோ வரவில்லை. ஆனால் எதிரியின் சார்பில் சில முக்கிய விஷயங்களை சொல்லவேண்டியிருக்கிறது!"

"உமக்கு இந்தக் கேஸ் சம்பந்தமாக.......?"

"நிறையத் தெரியும். சொல்லவேண்டியவைகள் அநேகமிருக்கின்றன!"

பாரிஸ்டர் பரமானந்தம் இப்படிக் கூறியதும் நான் திடுக்கிட்டேன். "நிறையத் தெரியும்....!" இந்தச் சொல்.... அப்படியானல்...? என் சிந்தனை சட்டென்று நின்றது. அந்தப் பெண்ணைப் பற்றிய விஷயங்களை அறிய வேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்த ஆவல் மேலும் எழும்பிக் குதித்தது. ஆனால் அதை நான் காட்டிக்கொள்ளவில்லை.

'மிஸ்டர் பரமானந்தன், எதிரியே குற்றத்தை ஒப்புக் கொண்டிருக்கிருள். மேலும், போலீஸ் தரப்பு சாட்சியங்களும் தெளிவாக இருக்கின்றன....!'

'இருக்கலாம்! ஆனல் அவளுடைய ஒப்புதல் மூலம், எதிரி குற்றவாளிதான் என்று முடிவுக்கு வருவதால், ஒரு நிரபராதியைத் தண்டித்த குற்றத்துக்கு இந்த நீதிமன்றமும் நீதிபதியும் பொறுப்பேற்க வேண்டிவரும். போலீஸ்தரப்பு சாட்சியங்களை மட்டும் வைத்துக்கொண்டு நீதியை நிலை நிறுத்திவிட முடியாது. அறங்கூறும் மன்றமாக இது இருக்க வேண்டுமானல், குற்றஞ் சாட்டப்பட்டுக் கூண்டிலே நிற்கும் அந்தப் பெண் சம்பந்தப்பட்ட அனைத்தும் அறிய வேண்டும்!'

பரமானந்தனின் இந்த வாசகங்களைக் கேட்டு நானும் கோர்ட்டிலிருந்தவர்களும் திடுக்கிட்டோம். கூண்டில் நின்ற பெண்ணைப் பார்த்தேன். அவளுடைய விழிகள் பரமானந்தனையும் என்னையும் மாறி மாறிப் பார்த்தன. பிறகு தாழ்ந்தன. 'நிரபராதியா?' - என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன்.

'இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட விஷயங்களாக இருந்தால் தாராளமாகச் சொல்லலாம். ஆனால், இந்தப் பெண் நிரபராதி என்பதை உம்மால் நிரூபிக்க முடியுமா?'

'நிரூபிப்பதோடு மட்டுமல்ல, இந்த வழக்கில்-இந்தப் பெண்ணினுடைய விஷயத்தில்-பெரிய பெரிய மனிதர்களெல்லாம் - உயர்ந்த பதவிகளில் இருப்பவர்களெல்லாம் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் எடுத்துக் காட்டப் போகிறேன். நான் சொல்லப்போகும் விஷயத்தில் அனுவசியமானது ஒரு வார்த்தைகூட இல்லை. அத்தனையும் அறிய வேண்டியவை!

பரமானந்தன் இவ்வாறு கூறியதும் நான் மட்டுமல்ல, கோர்ட்டிலிருந்த அத்தனைபேரும்-கூண்டிலே நின்ற அந்தப் பெண் உட்பட-திடுக்கிட்டோம். ஆச்சர்யம் அலைபாய பரமானந்தனையே உற்றுப் பார்த்தன எல்லோருடைய கண்களும். கணீரென ஒலித்தது பரமானந்தனின் குரல்!

'குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தப்பட்டிருக்கிறாள் இந்த இளமங்கை. இவளுடைய முகத்தை நன்றாகக் கவனியுங்கள். அவளுடைய விழிகளை நன்றாகக் கூர்ந்து நோக்குங்கள். களங்கமற்ற அவளுடைய முகத்திலே சாந்தம் தவழுகிறது. விழிகளிலே கனிவும், மிரட்சியும் விளையாடுகிறது.

சாதுவான இந்தப் பெண் ஒருவனைக் கொலை செய்திருப்பாளா? அந்தத் துணிச்சல் வந்திருக்குமா இந்த வஞ்சியிடம்? பயமும், மிரண்ட பார்வையும்கொண்ட அவளுடைய விழிகள் உங்களுக்குக் கூறுகின்றனவா இவள்தான் கொலைசெய்தாளென்று? நான் கூறுகிறேன், மகாலிங்கம் கொலை செய்யப்படவில்லையென்று.

குற்றவாளி, தானே கொலை செய்தேனென்று ஒப்புக்கொள்ளும்போது நான் அதை நம்ப மறுப்பதைக்கண்டு என்னைத் தவருகக்கூடக் கருதலாம்...! அவள் ஏன் தானே கொலை செய்தேன் என்று ஒப்புக்கொண்டாள்? மரண தண்டனையை வழங்கக்கூடிய ஒரு குற்றத்தை-அக்கொடிய காரியத்தைச் செய்யாதவள் - ஏன் வலிய வந்து ஒப்புக் கொள்ளவேண்டும்? தன் வாழ்வுக்கே முடிவு தேட ஏன் முன்வரவேண்டும்? இந்த மங்கை மகாலிங்கத்தைக் கொலை செய்யவில்லை. என்ருலும், தானேகொன்றேன் என்று கூறி குற்றத்தை ஒப்புக்கொள்வதன் மூலமாக, தானும் சாவைத் தேடிக்கொள்ள முன் வந்திருக்கிருள். ஏன்? தவிற, எதிரி, 'தானே கொலை செய்தேன்' என்பதைத் தவிர வேறு ஒரு வார்த்தைகூடச்சொல்லவில்லை; சொல்ல மறுக்கிருள்! ஏன்? ஏன் சொல்ல மறுக்கிருள்? நான் சொல்கிறேன். தன்னுடைய வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டு உயிருக்கு விடுதலையளிக்கத்தான் இப்படி ஒன்றையும் கூற மறுக்கிருள் என்று. அடுத்ததாக, தானே கொலை செய்ததாகக் கூறுகிருள். உயிரை மாய்த்துக்கொள்ளக்கூடிய அளவுக்கு அவளுடைய வாழ்க்கையில் கசப்பு மலிந்துவிட்டது. வெறுப்பு வேரூன்றிவிட்டது. இதற்குப் பல சம்பவங்கள் காரணமாக இருந்திருக்கின்றன. அந்தச் சம்பவங்களோடு, பல மர்மங்களும், இப்போது பெரிய மனிதர்களாக-உயர்ந்த அந்தஸ்தில் பலராலும் பாராட்டும் முறையில் வாழ்ந்து

கொண்டிருக்கிறர்களே அவர்களின் சென்றகால வாழ்க்கையும் பின்னுண்டு கிடக்கின்றன. இதில் விசித்திரமென்னவென்றல் இந்த விவரமெல்லாம்-ஒருசிலவற்றைத்தவிர, இந்த இள மங்கைக்குத் தெரியாது என்பதுதான்....!'

கம்பீரமான குரலில் உறுதி தொனிக்க வார்த்தைகளை வீசிக்கொண்டு போனர் பாரிஸ்டர் பரமானந்தன். அவருடைய வார்த்தைகள் ஆச்சர்யத்தை மேலும் மேலும் கொடுத்ததோடு ஆவலையும் தூண்டிற்று. கோர்ட் ஹாலெங்கும் அமைதி அரசோச்சிக்கொண்டிருந்தது. எல்லோருடைய கவனமும் பாரிஸ்டர் மேலும் என்ன கூறப்போகிறர் என்பதிலேயே இருந்தது. பரமானந்தன் மேலும் தன் பேச்சைத் தொடர்ந்தார்.

'தங்கத் தமிழ்நாட்டை தரித்திர நாராயணர்களின் நாடு என்று இப்போது சொல்லப்படுவதுண்டு! என்றாலும், தனவந்தர்களும் இருக்கத்தான் செய்கிறர்கள். அப்படிப்பட்ட தனவந்தர்களிலே ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையும் ஒருவர். அவருக்கு ஒரே ஒரு செல்ல மகனுக இருந்தான் சேகர் என்ற இளைஞன்....!'

நான்நிமிர்ந்து உட்கார்ந்தேன். 'மிஸ்டர் பரமானந்தன்! இது என்ன....? கதையா சொல்கிறீர்?'

பரமானந்தன் மெதுவாகச் சிரித்தார். 'கதை மாதிரி தான் இருக்கும் ஆனல்....!'

'ஆனல் போட வேண்டாம். நீர் கூறுவதைப் பார்த்தால் வழக்குக்குச் சம்பந்தமில்லாததை...!'

'நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் என்பது எனக்குத் தெரிகிறது. பல வருஷங்களுக்குமுன் நடந்த சம்பவங்களை

உங்கள்முன் கொண்டுவந்து நிறுத்தப்போகிறேன். எனவே தான் கதைபோலத் தெரிகிறது!'

'பல வருஷங்களுக்குமுன் நடந்த சம்பவங்களுக்கும், இந்த வழக்குக்கும் என்ன சம்பந்தம்?'

'இருக்கிறது. இல்லாததை பரமானந்தன் சொல்ல மாட்டான்....' அந்த சேகர் என்ற இளைஞன் சென்னையில் படித்துக்கொண்டிருக்கும்போது செல்லம்மாள் என்ற பெண்ணைக் காதலித்தான். அவள் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவள். என்றாலும், அவளுடைய தந்தை சர்க்கார் உத்தியோகத்தில் இருந்ததால் தனது பெண்ணைப் படிக்கவைக்க அவருக்கு வசதியிருந்தது.

செல்லம் தாழ்த்தப்பட்ட சாதியில் பிறந்தாலும் தக தக என மின்னும் தங்கம் போன்ற மேனியும், கொஞ்சும் பார்வையும், வசீகரமான முகமும் உள்ளவள். சுருக்க மாகச் சொன்னால் செல்லம் அழகின் சிகரத்தில் வீற்றிருந் தாள். அந்த அழகுக்கு அடிமையாகி அவளைக் காதலித்தான் சேகர். அவளுடைய சாதியோ, அந்தஸ்தோ சேகரின் காதலுக்குத் தடை கூறவில்லை. அந்தக் கருவிழியாளைக் காதலியாகக் கொண்டான். அவளும் அக்காதலில் கட்டுண் டாள். உயர்ந்த சாதியில்-அந்தஸ்தில்-உள்ள ஒரு இளைஞன், அழகானவன், படித்தவன், பணக்காரத் தந்தைக்கு ஒரே மகன்-இப்படிப்பட்ட சேகரனின் காதலை அவள் மறுப் பாளா? அவளென்ன வேறு எந்தப் பெண்ணும் மறுக்க மாட்டாள்!

சேகரனின் அன்பைப்பெற்ற செல்லத்தின் உள்ளம் மகிழ்ச்சியால் மலர்ந்தது; பூரித்துப் போனாள், பேதை! தனது வருங்காலத்தை வண்ண வண்ணக் கனவுகளால்

வடிவம் செய்தாள். அவளுக்கு அன்றைய வாழ்க்கை சொர்க்கமாக இருந்தது.

சென்னைப் படிப்பு முடிந்ததும் சீமைக்குப் போக வேண்டி வந்துவிட்டது சேகருக்கு. பாரிஸ்டர் படிப்புக்குப் பரங்கியின் நாட்டுக்குப் போகிறான் தன் காதலன்—என்று அறிந்த செல்லத்தின் மனம் அதிர்ச்சியடைந்தது. சேகர் தேறுதல் சொன்னான். ஆறுதல் கூறினான். "உன் பதி பாரிஸ்டர் என்று சொல்லப்படும் போது—பட்டம் பெற்றவர் என்று கூறப்படும்போது—பேரும், புகழும், பணமும் சம்பாதித்து வாழும்போது, அது உனக்குப் பெருமையாக இராதா? மகிழ்ச்சியாக இராதா? இந்த அந்தஸ்தில் உள்ள ஒருவனின் மனைவி யென்பதில் உன் மனம் பூரிக்காதா?....செல்லம், என் சிந்தையில் நிரம்பியிருக்கும் உன்னை விட்டுச் சீமைக்குப் போவது எனக்கு மட்டும் மகிழ்ச்சியாகவா இருக்கிறது? சிந்தைக் கினியவளான உன்னைவிட்டு—என் இன்பக் களஞ்சியமான உன்னைவிட்டு—இங்கிலாந்துக்குப் போவதென்றால் என் மனம் சந்தோஷமாகவா இருக்கிறது? உள்ளத்தில் அரசோச்சும் உன்னை விட்டுப் பிரிந்து செல்வதால் நான் எவ்வளவு வேதனைப்படுகிறேன் தெரியுமா? என்றாலும் நமது வருங்கால வாழ்க்கைக்காக—அப்போது ஏற்பட இருக்கும் நமது வாழ்க்கை இன்பத்துக்காக—நாம் பிரிந்துதான் ஆக வேண்டியிருக்கிறது!"—என்றெல்லாம் கூறினான். அவனுடைய வார்த்தைகள் அவளுக்கு இனித்தன. ஆனால் தாழ்ந்த சாதியில் உள்ள தன்னை எங்கே மறந்துவிடுவாரோ—அந்தஸ்தில் உயர்ந்தவரான அவர் தன்னைக் கைவிட்டு விடுவாரோ—இங்கிலாந்துக்குப் போகும் அவர் அங்குள்ள எழிலரசிகளின் வலையில் சிக்கிவிடுவாரோ—அப்படித் தப்பி வந்தாலும் சேகரின் பெற்றோர் தன்னை மணக்க சம்மதம்

கொடுப்பார்களா—படித்துப் பட்டம் பெற்று பாரிஸ்டராக வரும் அவருக்குப் பணக்கார வீட்டுப் பாவை ஒருத்தியை —அவருடைய சாதியில் உள்ள ஒரு சரஸியை—மண முடித்து வைக்கத் தீர்மானித்தால் ஒருக்கால் இணங்கி விடுவாரோ—என்ற எண்ணங்கள் கேள்வியுருவிலும், சந்தேக வடிவத்திலும் எழுந்தன. ஆனால் அந்தக் கேள்விகளுக்கும், சந்தேகங்களுக்கும் வார்த்தைகளால் சாவோலை நீட்டினான் சேகர்.

"செல்லம், என் சிந்தையில் உனக்கு ஒருவளுக்குத் தான் இடம். அந்த இடத்தை விட்டு உன்னைத் துரத்த இங்கிலாந்திலல்ல, இந்த உலகத்திலே எந்தப் பெண்ணாலும் முடியாது...! அம்மா அப்பா உன்னை மணக்க சம்மதிக்காவிட்டால் அதற்காகப் போராடுவேன். அந்தப் போராட்டத்திலேயும் அவர்கள் என் விருப்பத்துக்கு இணங்காவிட்டால் அவர்களைக்கூட லட்சியம் செய்யாது உன்னை மணப்பேன்; இது உறுதி! நம் காதல் மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன், உன்னைத் தவிர வேறு எந்த வேல்விழியாளையும் மனத்தாலும் தீண்டியது கிடையாது; இனித் தீண்டப் போவதுமில்லை. இது உறுதி! நீ தான் என் மனைவி....! நீ தான் என் இன்பம்....! நீதான் என் வாழ்க்கை! விண்ணில் உலவும் இந்த நிலாவும், வீசும் தென்றலும், மலர்களின் இனிய மணமும் அறிய இது சத்தியம்!"—என்று களவியல் மொழி கூறினான், சேகர்.

செல்லம் இரு மடங்காகிவிட்டாள் பூரிப்பால். ஆனந்தக் கடலில் நீந்தினாள். உள்ளம் களிப்பால் துள்ளியது. தன்னை மெய் மறந்தாள். இன்பத்தின் உச்சியில் ஏறி நின்றாள் அப்போது.

சேகர் இங்கிலாந்துக்குச் சென்றுவிட்டான். செல்லத்துக்கு அழகிய மடல்கள் தீட்டிக்கொண்டிருந்தான்.

செல்லம் தன் இதயத்தில் கூத்தாடும் எண்ணங்களை—பொற் கனவுகளை—சொற்களால் சித்திரமாக்கி சேகருக்கு அனுப்பிக்கொண்டிருந்தாள். தன் மனதைக் கவர்ந்த கண்ணாளன் பட்டம் பெற்று பாரிஸ்டர் என்ற பெயருடன் வருவான்; வந்ததும் வாரி அணைத்துக் கொள்வான், மணம் செய்துக்கொள்வான் என்றெல்லாம் கனவு கண்டாள். அந்தக் கனவை நனவாக்குவதற்கு சேகரின் வரவை ஆர்வமுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். செல்லத்தின் உயிரும் உணர்வும் சேகரின் உருவத்தில் பதிந்திருந்தன.

நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. பாரிஸ்டர் படிப்பை முடித்துக்கொண்டு பம்பாய் வந்திறங்கினான் சேகர். அங்கிருந்தே தன் வரவை தந்தி மூலம் அனுப்பினான் செல்லத்துக்கு. அவள் ஆடினாள், பாடினாள், குதித்தாள், கூத்தாடினாள் சந்தோஷத்தால்.

சென்னைக்கு வந்த சேகர் வீட்டுக்குக்கூடப் போகவில்லை. செல்லத்தின் ஊரான வட ஆற்காட்டுக் கிராமத்துக்குச் சென்றான். இருவரும் ஒருவரை ஒருவர் அணைத்துக் கொண்டனர். பிரிவினால் ஏற்பட்ட வெந்துயர் கருகிற்று. களிப்புப் பொங்கியது.

"செல்லம், இனி நமது திருமணம் ஒன்றுதான் பாக்கி. வீடு சென்றதும் முதல் நமது கலியாணத்துக்கு ஏற்பாடு செய்வதுதான்!"—என்றான் சேகர். செல்லம் தன்னை மறந்தாள் அவன் மேல் துவண்டாள். அன்றுதான் தங்கள் அன்பின் அறுவடைக்கு வித்திட்டனர்; செல்லம் கன்னி கழிந்தாள்.

செல்லத்திடம் விடைபெற்றுக் கொண்டு சென்னை திரும்பினான் சேகர். பெற்றோர் அவனை வரவேற்றனர்.

சில நாட்கள் கழிந்தன. சேகரைப் பார்ப்பதற்காக வெளியூரிலிருந்து ஒரு இளமங்கையும், ஒரு பெரியவரும் வந்தார்கள். சிதம்பரம் பிள்ளை முகமும், அகமும் மலர அவர்களை வரவேற்ருர். சேகருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார் அந்த இளமங்கையை.

சீமான் சிதம்பரம் பிள்ளையைப்போல பெரிய தனவந்தர் தாண்டவராய பிள்ளை. சிதம்பரம் பிள்ளையும் அவரும் நெருங்கிய நண்பர்கள். தன் மகள் இந்திராவை சேகருக்கு மணம் செய்துவைக்க வேண்டுமென்று எண்ணிஞர் தாண்டவராய பிள்ளை. சிதம்பரம் பிள்ளையும் அதற்கு இணங்கிஞர். இந்திரா படித்தவள், தன் தந்தையுடன் மேல்நாடெங்கும் போய் வந்தவள். தனவந்தர் தாண்டவராய பிள்ளையின் சொத்துக்கு ஏகவாரிசு. இப்படிப்பட்ட பெண்ணைத் தன் மருமகளாகக் கொள்ள விரும்பாமலிருப்பாரா சிதம்பரம்பிள்ளை? சேகர் இங்கிலாந்திலிருந்து திரும்பியதும் இருவருக்கும் திருமணத்தைச் செய்துவிடலாம் என்று முடிவு செய்திருந்தனர். சேகர் வந்த சேதியை அறிவித்தார் சிதம்பரம் பிள்ளை. தன் மகளையும் அழைத்துக் கொண்டு உடனே புறப்பட்டுவிட்டார் தாண்டவராய பிள்ளை. அவர்கள்தான் நான் மேலே குறிப்பிட்ட இளமங்கையும், பெரிய மனிதரும்.

இரண்டு நாட்கள் தங்கிவிட்டு அவர்கள் போய்விட்டார்கள். அவர்கள் சென்றதும், திருமணப் பேச்சை எடுத்தார் சிதம்பரம் பிள்ளை. திடுக்கிட்டான் சேகர். தன் எண்ணத்தை எப்படிச் சொல்வது என்று சிலநாட்கள் தயங்கிஞன். கடைசியில் தன்னைத் தைரியப்படுத்திக் கொண்டு தனது தீர்மானத்தைச் சொன்ஞன்.

தீயை மிதித்தவர்போல் துள்ளினார் சிதம்பரம் பிள்ளை. சினந்தார், சீறினார். 'ஈனசாதிப்பெண்ணை உன் இல்லாளாக்க வெட்கமில்லே...? உன் படிப்பென்ன, அந்தஸ்தென்ன, குலமென்ன, கோத்திரமென்ன, இதையெல்லாம் யோசிக்காமே காதலா கொண்டுவிட்டாய் காதல்?' என்று வெகுண்டெழுந்து கோபக்கனலை அள்ளி வீசினார். சீறிப்பாய்ந்தார்.

அவர் ஏன் சீறமாட்டார்? முப்பத்து முக்கோடி தேவர்களென்றால் சூழ்கின்ற பேதமும் அத்தொகையிருக்கும் என்று மனம் நொந்து கூறினான் ஒரு கவிஞன். அத்தனை பேதங்களையும், சாதிப் பிரிவுகளின் பேரால் வைத்துக் கொண்டிருக்கும் சமூகம்தானே நம்முடையது? சமுதாயத் தரையிலே வேரூன்றியிருக்கும் சாதி என்ற விஷ விருட்சத்தின்கீழ் வாழ்கிறவர்கள்தானே நம் மக்கள்? உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற அழுகிப்போன-கொடூரமான-கோட்பாட்டைக் கும்பிட்டுக்கொண்டிருக்கிற மக்களைக் கொண்டது தானே இந்நாடு? ஆண்டவன் படைத்தான் பிறப்பின் பேதங்களை என்ற கற்பனைக்கு உயிரும், உணர்வும் ஊட்டி நாட்டிலே நடமாடவிட்டு சமூக வாழ்வை நாசமாக்கிக்கொண்டிருக்கிற வைதீகம் வாழும் நாடுதானே நம்முடையது? இந்த நாட்டிலே பிறந்தவர்தான் ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையும். அவர் சீறாமலிருப்பாரா? உயர்ந்த சாதியில் பிறந்தவன் என்ற இறுமாப்பில் இருப்பவர் தன் மகன் தாழ்ந்த சாதியில் உள்ள தளிர் மேனியாள் ஒருவளைக் கலியாணம் செய்துகொள்ளத் தீர்மானித்திருப்பதைக்கண்டு ஆத்திரப்படாமலிருப்பாரா? செல்லம் சாதியில் மட்டும் தாழ்ந்தவளல்ல. அந்தஸ்திலும் தாழ்ந்தவள். பணம் பல லட்சம் கொண்ட தன் மகன் பரதேசிக் குடியில் பிறந்தவளான செல்லத்தைக் கலியாணம் செய்துகொள்வதென்றால்? ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையின்

மகன் சீரழிந்த குலத்தில் உதித்தவளான செல்லத்தை மணமுடித்துக் கொள்வதென்றால்- நடக்கக்கூடிய காரியமா? நடக்கவும் விடலாமா?-இப்படி எண்ணிய அவர் ஏன் சிறும மிருக்கிறார்? பணமும், பகட்டும், போலி அந்தஸ்தும் ஆட்சி செய்யும் சமூகத்தில் பிறந்தவர்தானே சிதம்பரம் பிள்ளையும்? ஒன்றுபட்ட உள்ளங்களை வெட்டி வீழ்த்துவதில்-கூடிக் கலந்தவர்களின் வாழ்க்கையைக் குலைப்பதில்-இந்த அந்தஸ்து சாதி என்ற கொடுவாட்கள் முன்னின்று செயலாற்றும். பணத்தினால் கிடைத்த அந்தஸ்திருக்கிறதே அது ஒரு நச்சுப்பாம்பு! அது உயர்ந்தவர்களின்-ஓரடுக்கு, இரண்டடுக்கு என்று பல அடுக்குகள்கொண்ட மாடிவீட்டு மந்தகாச வாழ் வினரின்-நெஞ்சிலே, வாழ்விலே புரண்டுகொண்டிருக்கிறது. ஏழைகளை-ஏதும் அற்ற அனாதைகளை-அந்தஸ்து பெறாதவர் களை-இந்த மாளிகை வாசிகளின் வாழ்வில் வந்து ஒட்டிக் கொள்ளாதவாறு தடுக்க அது காவலாக இருக்கிறது....! அவ்விதமான அந்தஸ்தென்ற பாம்பை தங்கள் வாழ்வில் நெளியவிட்டுக் கொண்டிருக்கும் பரம்பரையைச் சேர்ந்தவர் தானே சிதம்பரம் பிள்ளை? சிறுமமிருப்பாரா? பணம், அன்பு, குணம், அறிவு, இரக்கம்-இவையெல்லாம் நம் சமூக வாழ்வில் ஒன்றாக கலந்திருக்கவில்லை. ஒவ்வொன்றும், ஒவ் வொரு திக்கிலே சிதறுண்டு கிடக்கின்றன. இதனால்தான் நாட்டின்வாழ்வு-நாட்டுமக்களைக்கொண்ட சமூக வாழ்வு சீரழிகிறது, சிதைகிறது. ஆம் செல்லத்தின் வாழ்வும் அப்படித்தான் சீரழிய வேண்டும் என்று தீர்ப்புக் கூறி விட்டது, உயர்ந்த அந்தஸ்து!

கட்டளையிட்டார் சிதம்பரம் பிள்ளை. 'சேகர் நீ இந்திராவைத்தான் கலியாணம் செய்துகொள்ளவேண்டும்; இல்லையேல், நீ என் மகனல்ல....!'

இவ்வளவுதான் அவர் சொன்னது. இந்த வார்த்தைகள் வீசப்பட்ட உடன் சேகர் என்ன செய்திருக்கவேண்டும்? போராடியிருக்கவேண்டும்! தன் காதலுக்காகப் போராடியிருக்கவேண்டும்! தங்கள் காதலைக் காலில் போட்டு மிதிக்க ஆவேசத்துடன் வரும் சாதி வேறுபாட்டை ஒழிக்கப் போராடியிருக்கவேண்டும்! சமூக வாழ்வைச் சாக்கடையாக்கி வைத்திருக்கிற அந்தச் சாதிப் பிரிவினைகள், தங்களுடைய வருங்கால வாழ்க்கையை-ஒன்றுபட்ட இணைப்பை-வெட்டி வீழ்த்த வருவதை எதிர்த்துப் போராடியிருக்கவேண்டும்! எத்தனையோ இளங்காதலர்களின் ஒன்றுபட்ட உள்ளங்களைப் பிரித்து அவர்தம் வாழ்க்கையைத் தூக்கிலேற்றியிருக்கிற அந்தஸ்து இருக்கிறதே. அது, தங்களுடைய காதலை நாசப்படுத்த முனைந்து நிற்பதை எதிர்த்து போராடியிருக்கவேண்டும்! தன்னால் காதலிக்கப்பட்டு-கற்பழிக்கப்பட்டு-கலியாணம் செய்துகொள்வார் சேகர் என்று இன்பக் கனவு கண்டுகொண்டிருக்கும் ஏதும் அறியாத அந்தச் செல்லத்தின் வாழ்க்கைக்காகப் போராடியிருக்கவேண்டும்! தன் மேல் துவண்டு கிடக்கும் தோகையைப் பார்த்துக் கூறினானே சேகர், உனக்காக-உன்னை மனைவியாக்குவதற்காக-நான் போராடுவேன், நம் காதலுக்குக் கத்தி பாய்ச்ச வரும் எந்த சக்தியையும் எதிர்த்துப் போராடுவேன் என்று-அதன்படி போராடியிருக்கவேண்டும்! போராடினானா அந்தப் பாரிஸ்டர்? படித்துப் பட்டம் பெற்ற அந்தப் பாரிஸ்டர் போராடினானா? இல்லை! அவன் போராடவில்லை! அதற்கு மாறாக தன் சிந்தையில் அரசோச்சும் செல்லத்தையும், தன் முன்னால் முகில் கிழித்த மதியைப்போல் காட்சியளித்துச் சென்ற இந்திராவையும் ஒப்பிட்டுப் பார்த்தான். இந்திரா படித்தவள். பணக்காரி, பாரிஸ் லண்டன் நாகரீகங்களைக் கற்றுத் தேர்ந்தவள்—இப்படிப்பட்ட

வளுடன் வாழ்க்கை நடத்தினால் எப்படியிருக்கும் என்று எண்ணிப் பார்த்தான். மாபெரும் மாளிகை, புத்தம் புதிய பியூக் கார், பேரும் புகழும் பணத்தோடு உள்ள பாங்கான வாழ்வு—இவ்வளவும் கிடைக்கும் இந்திராவைக் கலியாணம் செய்து கொள்வதால். ஆனால் செல்லத்தை மனைவியாக்கிக் கொண்டால் இவைகள் கிடைப்பது நிச்சயமில்லை. கிடைக்காமலே விடலாம். பெற்றோரின் எதிர்ப்பு, ஊராரின் எதிர்ப்பு, அந்தஸ்து பெற்ற சீமான்களின் ஆத்திரம்—இவ்வளவையும் பெறவேண்டி வரும். செல்லத்தின் அழகையும், குணத்தையும் விரும்பினால் நம் வாழ்வு இன்பச் சோலையாக இராது; துன்பக் காடாக இருக்கும். ஆகவே, அப்பா சொல்கிறபடி இந்திராவைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டியதுதான். தவிரவும், செல்லம் சுவைக்கப்பட்ட கனி; இந்திரா தனக்காகச் சுவைக்க இருக்கும் கனி...!-இப்படி அவன் எண்ணங்கள் உருண்டன.

தன் சுயநலமான இத் தீர்மானம் தன்னையே நம்பியிருக்கும் ஒரு தையலின் வாழ்க்கைக்குத் தணலை மூட்டி விடுமே என்று அவன் எண்ணிப் பார்க்கவில்லை. தனது தீர்மானம் தீயைப் போன்று, ஒரு தீதுமறியாத அந்த ஏழைச் செல்லத்தின் வாழ்வைப் பொசுக்கி விடுமே என்று அவன் எண்ணிப் பார்க்கவில்லை. தான் கொடுத்த வாக்குறுதியை—இட்ட ஆணைகளை கவனப்படுத்தவில்லை. இதன் விளைவு செல்லத்துக்கு அவன் அனுப்பிக்கொண்டிருந்த கடிதங்கள் நின்று விட்டன.

கடிதம் வராத காரணத்தை அறியாது கலங்கினாள் செல்லம். கண்ணீர் விட்டாள். தனது கனவுகளெல்லாம் நனவாகாமல்—உயிரும் உணர்வும் பெற்று நடமாடாமல்—போய் விடுமோ—என்று அஞ்சினாள். கடிதத்துக்கு மேல்

கடிதம் அனுப்பிக்கொண்டிருந்தாள். பதிலே இல்லை! சேகர் அக் கடிதங்களை கண் திறந்தும் பார்க்கவில்லை.

செல்லத்தைத் திகிலும், ஏக்கமும் வாட்டி வதைக்கத் துவங்கின. வயிற்றில் தவழும் பாலகனும் தன் காலால் உதைக்கத் துவங்கினான்.

நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன.

நல்ல சுப முகூர்த்தத்தில் ஐயர் ஆசீர்வதிக்க, சுற்றியிருந்தோர் வாழ்த்துக் கூற, பிரமுகர்களும் பெரிய மனிதர்களும் சூழ்ந்திருக்க, ஸ்ரீமான் பாரிஸ்டர் சேகர் அவர்கள் இந்திராவின் கழுத்தில் தாலியைக் கட்டினார். மங்கல வாத்தியங்கள் முழங்கின ...மலர் மாலைகள் குவிந்தன ...

எந்தச் சுபமுகூர்த்தத்தில் சேகருக்கும் இந்திராவுக்கும் மணவிழா நடந்ததோ, அதே சுப முகூர்த்தத்தில்தான் ஒரு பாவமும் அறியாத செல்லம்மாளின் வாழ்க்கையில் இருள் சூழ்ந்தது. எந்த சுப முகூர்த்தத்தில் இந்திராவைத் தன் மனைவியாகக் கொண்டானோ, அதே சுப முகூர்த்தத்தில்தான் தன்னுடைய துரோகத்துக்கு முடிசூட்டு விழா நடத்தினான் இந்திராவின் கழுத்திலே தாலியைக் கட்டுவதன் மூலமாக. ஆம், அந்த சுப முகூர்த்தத்தில் நடந்த நிகழ்ச்சிதான் செல்லம், சேகரின் மனைவியல்ல—மனைவியாக முடியாது என்று அறிவித்து விட்டது! ஐயர் ஆசீர்வதித்துக் கொண்டிருந்த அதே நேரத்தில் அங்கே செல்லத்தின் தூய வாழ்க்கைக்கு ஆரம்ப விழா நடந்துவிட்டது!

முதல் இரவின் இன்பத்தை அனுபவிக்க ஆர்வமுடன் இருந்தான் சேகர். ஆனந்தமான முதல் இரவு! சேகர் இந்த முதல இரவின் இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் போதுதான், சேகருக்கு இது முதல் இரவல்ல, அதற்கு

அடுத்த இரவுகள் என்று கூறிக்கொண்டு செல்லத்தின் வயிற்றிலிருந்து குதித்தான் அவன் மகன்! முதல் இரவு இந்திராவுடன் அல்ல! என் அம்மா செல்லத்துடன்!—என்று முழங்கிக்கொண்டே அவன் மகன், அந்தஸ்து பெற்ற கன வான்களின் இன்பபுரியான இந்த உலகத்துக்கு வந்தான்.

பாரிஸ்டர் சேகர் தன் மனைவி இந்திராவுடன் குடித் தனம் துவங்கினான்.

நாட்கள் உருண்டு கொண்டிருந்தன. பாரிஸ்டர் சேகருக் குப் பேரும், புகழும், பணமும் குவிந்துகொண்டிருந்தன. நாட்டிலே நல்ல செல்வாக்கு. பாரிஸ்டர் சேகர் என்றால் நீதி மன்றங்களில் ஒரு சுறுசுறுப்பு; ஒரு கலகலப்பு! வாழ்க்கை அவனுக்குப் பொன் ஊஞ்சலாக இருந்தது. ஆனந்தத்துடன் ஆடினான் மனைவி இந்திராவுடன். சேகரின் வாழ்க்கை இங்கே சொர்க்கமாக இருக்க, செல்லத்தின் வாழ்க்கை அங்கே எப்படி யிருந்தது தெரியுமா? ஒரே வாக்கியத்தில் சொல்லப் போனால் நரகமாக இருந்தது!

தன்னை விட்டுச் சென்ற சேகர் அஞ்சல் அனுப்பவில்லை; என்றாலும் அவன் தன்னை மறக்கமாட்டான், என்றாவது ஒரு நாளைக்கு வருவான்—என்று எதிர்பார்த்திருந்தாள். ஆனால், அவனுக்குத் திருமணமாகி விட்டதென்ற செய்தியை அவ னுடைய தந்தை சொன்னதைக் கேட்டதும் அவள் திடுக்கிட வில்லை; திகைக்கவில்லை; உயிரும் உணர்வும் அற்ற கற்சிலை யானாள்.

செல்லத்தின் தகப்பனுருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. தன் ஒரே மகளின் வாழ்க்கைப் பட்டுவிட்டதே என்று துடித்தார். தாழ்த்தப்பட்ட சாதி—தலை நிமிர்ந்து உலவ முடியாத குலம்—படிப்பினால் மட்டுமே

ஓரளவுக்கு முன்னுக்கு வரலாம் என்ற எண்ணத்துடன் தன் மகளைப் படிக்க வைத்து, அவளுடைய வருங்காலத்தை ஒரு வண்ணச் சோலையாக்க எண்ணியிருந்தார். ஆனால் அந்த எண்ணம் மண்ணில் புதைந்த பொருளாகி விட்டதை நினைத்து உள்ளம் உடைந்துவிட்டார். ஆராத துயரத்தில் ஆழ்ந்தார். அந்தத் துயரம் நாளடைவில் நோயாக மாறி, கடைசியில் அவரை நிரந்தரத் தூக்கத்தில் ஆழ்த்திவிட்டது.

தன் கதியை நினைத்துக் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தவள், தன் மடியில் தவழும் மகனைப் பார்த்து நெஞ்சு விம்மிக்கொண்டிருந்தவள், தன் வாழ்க்கைக்கொடி கொழு கொம்பில்லாத கொடிபோல சாய்ந்துவிட்டதை எண்ணி உள்ளம் வெதும்பிக்கொண்டிருந்தவள், இப்போது தனக்கு ஒரே ஒரு ஆதரவாக இருந்த தந்தையும் தன்னைவிட்டுப் பிரிந்து சென்றதை நினைத்துக் கதறினாள்; தலையிலடித்துக் கொண்டாள்; முட்டி மோதிக்கொண்டாள். தந்தை சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் அவள் காதில் ஒலித்துக்கொண்டிருந்தன.

'அம்மா செல்லம், உயர்ந்த சாதிக்காரர்களின் காதலை-அந்தஸ்துள்ளவர்களின்-காதலை நம்பாதே! குபேரபுரியினர் குடிசையூராரின்மேல் காதல் கொள்வதிருக்கிறதே! அது வேட்டையாடப்படுவதுபோல. உல்லாசத்துக்காக வேட்டைக்குப் போகிறார்கள், பெரிய மனிதர்கள்-கனவான்கள். புள்ளிமானைக் கண்டதும், ஒரு ஆசை பிறக்கிறது. உயிருடன் பிடிக்க முயலுவார்கள் முடியாவிட்டால் சுட்டுவிடுவார்கள்! உன்னையும் அப்படித்தானம்மா சுட்டுவிடுவார்கள். உன் மானத்தைச் சுட்டுவிடுவார்கள்....! ஒன்றுமில்லாதவர்களின் மேல் உயர்ந்த மாளிகையினர் கொள்ளும் காதலிருக்கிறதே அது ஆட்டின்மேல் புலி கொள்ளும் காதலைப் போன்றது.

அம்மா, நீ நினைத்திருக்கலாம்; அல்லது படித்திருக்கலாம்! காதலுக்கு ஏழை பணக்காரன்-உயர்வு தாழ்வு-இல்லையென்று! காவியங்களிலேதான் அப்படியிருக்கும். வாழ்க்கையில் இது இல்லையம்மா!'

—என்றெல்லாம் அவள் தந்தை சொல்லியிருந்தார். அவர் சொன்னது உண்மை தானென்பதை அப்போது கண்கூடாகக் கண்டாள். அவள் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது. தன் ஆசைக் கனவுகள்—இன்பக் கோட்டைகள்—எல்லாம் பீரங்கியின் முன் எதிர்ப்பட்ட மாளிகை போல் தகர்ந்து விழுந்ததைக் கண்டதும் அவளுடைய உணர்வுகள் ஊமையாய்விட்டன; எண்ணங்கள் முடமாகிவிட்டன; சிந்தை செயலற்று விட்டது. இந்த நிலையில் இரண்டு ஆண்டுகளைக் கடத்தினாள். இந்தக் காலத்தில் அவள் அடைந்த துன்பம் வேதனை வார்த்தைகளில் அடங்குவதல்ல.

கையிலே குழந்தை ஆனால் கணவனில்லை. அவளைத்தவிர கணவன் யார் என்று எவருக்குமே தெரியாது. கன்னி ஒருவள் கைக் குழந்தை ஒன்றுக்குத் தாயாகிவிட்டால் அவள் நிலை எப்படி யிருக்கும்? சமூகத்திலே அவள் எப்படி மதிக்கப்படுவாள்? தாழ்ந்த சாதியில் பிறந்தவளுக்கு இத்தனை அழகா—பட்டணத்தில் வேறு படித்தவளா—என்ற பொறுமை ஊர்ப் பெண்களுக்கு. செல்லத்தை எப்படியாவது அவமானப் படுத்த வேண்டும் என்ற எண்ணம் உயர்ந்த வட்டாரத்துப் பெண்களுக்கு. அவர்களுக்கு கணவனில்லாது தாயாகிவிட்ட செல்லத்தின் தற்போதைய நிலை தங்கள் பொறுமையைக் காட்ட நல்ல சந்தர்ப்பமாக இருந்தது சொல்லவா வேண்டும். கண்ட இடமெல்லாம் தூற்றினர். வாயில் வந்தபடி ஏசினர்.

எவ்வளவு தொல்லைகளைக் கொடுக்க முடியுமோ அவ்வளவையும் கொடுத்தனர். அவளை ஊரை விட்டே துரத்த முயன்றனர்.

அனுதை என்ன செய்வாள்? அவமானத்தால் குன்றினுள். அந்த ஊரில் இருக்க முடியாதென்ற நிலை ஏற்பட்டதும் அவள் மனம் பட்டபாடு—

அவள் ஜீவிப்பதே பெரிய பிரச்னையாகி விட்டது. அவள் தந்தை ஒன்றும் வைத்துவிட்டுப் போகவில்லை. இருக்கும் வீடுகூட ஒரு லேவாதேவிக்காரனுக்கு ஈடு இருந்தது. அவன் ஊராரின் தூண்டுதலுக்கு இணங்கி அந்த வீட்டைத் தனதாக்கிக் கொண்டு வீட்டை விட்டு வெளியேற்றினுன் செல்லத்தை!

இவ்வளவும் நடந்த பிறகு அவள் உயிர் வாழ விரும்பவில்லை. தன் வாழ்க்கையை முடித்துக் கொள்ள விரும்பினுள். ஆனுல் தன் மகனை என்ன செய்வதென்று யோசித்தாள். கடைசியில் தன்னை மோசம் செய்தவனுக்குப் பிறந்தவனை அவனிடமே சேர்த்துவிட்டுத் தற்கொலை செய்து கொள்வது என்று தீர்மானித்துக்கொண்டு சென்னைக்குப் புறப்பட்டாள்.

எழும்பூர் ஸ்டேஷனை விட்டு அவள் இறங்கும்போது அவளுடைய நிதி எவ்வளவு தெரியுமா? இரண்டணு! அந்த இரண்டணு பணமும், பாலகனும் உடனிருக்க பாரிஸ்டர் சேகரின் மாளிகையைத் தேடி அலைந்தாள். கடைசியில் 'ஆனந்தர்கள்' வாழும் அடையாற்றுக்கு வந்தாள். தன் மாஜி காதலனின் மாளிகை அங்கே இருப்பதை அறிந்து அதை நோக்கி விரைந்தாள்.

பாரிஸ்டர் சேகரின் பங்களாக் காம்பவுண்டுக்குள்ளும் வெளியிலும், ஏராளமான கார்கள் 'பாலிஷ்' மின்ன நின்று கொண்டிருந்தன. பெரிய பெரிய கனவான்களும், சீமான் களும், சீமாட்டிகளும் காரில் வந்து இறங்கியவண்ண மிருந்தனர். மாளிகை வாசலிலே தோரணங்கள் கட்டப் பட்டிருந்தன. இதை யெல்லாம் பார்த்த செல்லத்துக்கு ஒன்றுமே புரியவில்லை. வேறு பங்களாவுக்கு வந்துவிட் டோமோ என்று ஒரு கணம் நினைத்தாள். யாரிடமும் விசாரித்தறிய அவளைப் போல 'குடிசையூர் வாசிகள்' யாரும் அங்கு இல்லை. திகிலுடன் கேட்டின் அருகில் நின்று கொண்டிருந்தாள்.

பாரிஸ்டர் சேகர், பப்ளிக் பிராஸிக்யூட்டராகச் சர்க் காரால் நியமிக்கப்பட்டான். அதற்காக அன்றைக்கு ஒரு விருந்து வைத்தார், சேகர் அவர்கள். அந்த நிகழ்ச்சிதான் நடந்து கொண்டிருந்தது அப்போது! இதை அறியமாட் டாள் செல்லம்.

விருந்து நடந்து முடிந்தது; வாசலில் நின்றுகொண்டு வந்தவர்களை வழியனுப்பிக் கொண்டிருந்தான் சேகர். தன் மனைவி சகிதமாக! இதைக் கண்டாள் செல்லம். அவள் உள்ளம் தேம்பித் தேம்பி அழுதது; துடித்தது; சுருண்டது சோகத்தால். இந்த நிலையிலும் அவள் மனம் நப்பாசைக் கொண்டது. ஒரு வேளை நம்மைப் பார்த்தால், பழைய நிகழ்ச்சிகளெல்லாம் நினைவுக்கு வந்து நம்மை ஏற்றுக் கொள்ளமாட்டாரா? அவர் இன்னொரு பெண்ணுக்கு கணவனாக இருந்தாலென்ன, நான்தானே முதல் மனைவி? அவருக்கு அருகில் நிற்கும் அந்தப் பெண்—அவருடைய முதல் மனைவி...! இருந்தாலென்ன; சமூக அகராதிப்படி அவளுக்கு சேகர் கணவர்.......! ஆனால் நீதிப்படி—

நியாயப்படி—எனக்குத் தான் கணவர் சேகர்...! அவள் கூட இருந்தா லென்ன? ஒற்றுமையாக வாழ முடியாதா? எனக்காக இல்லாவிட்டாலும், தனது மகனை—தான் அனுபவித்த இன்பத்தின் அறுவடையை—கண்ட பிறகாவது என்னை வெறுத்து ஒதுக்கி விடுவாரோ?.......

இவ்விதமான எண்ணங்கள் அவள் இதயக் கடலில் வாரிவாரி அடித்துக் கொண்டிருந்தன. இதற்குள் வந்திருந்த விருந்தாளிகள் அனைவரும் போய்விட்டார்கள். முன் ஹாலில் சேகரும், இந்திராவும் பேசிக்கொண்டிருந்தார்கள். இதுதான் சமயமென்று வேகமாக ஓடிச்சென்று சேகரின் காலடியில் போய்விழுந்தாள்.

திடுக்கிட்டார் சேகர். 'யார் நீ?' என்று அதிகாரக் குரலில் கேள்வியை வீசினர். 'என்னைத் தெரியவில்லையா?'-என்று பரபரப்புடன் கேட்டாள் செல்லம்.

உண்மையில் அவளை அப்போது அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை சேகரால். அவ்வளவுக்கு மாறியிருந்தாள் செல்லம். வேதனையும், விசனமும், கஷ்டமும் கவலையும் அவளை உருமாற்றியிருந்தன. அவளுடைய அழகு ஒளிந்திருந்தது. உடல் வனப்பு மங்கிருந்தது.... அவளுடைய அழகிய முகம் சுருங்கி வாடியிருந்தது.......சுருக்கமாகச் சொன்னல் உருவம் குலைந்து சோகத்தின் பிரதிபிம்பமாக இருந்தாள்.

நன்ருகக் கவனித்தார் சேகர். அதன் பிறகுதான் செல்லத்தை அறியமுடிந்தது. காலில் விழுந்து கிடப்பவள், தன் மார்பிலே புரண்ட காதலி அவளா இப்படி யிருக்கிருள்? என்று அவர் உள்ளம் பதை பதைத்தாரா, பரபரப்படைந்

தாரா......? இல்லை. மாறாக, "நீ யார்? உனக்கு இங்கே என்ன வேண்டும்?" என்ற வினாக்களை எடுத்து வீசினார் பப்ளிக்பிராஸிக்கியூட்டர் சேகர் அவர்கள்.

"சேகர் என்னைத் தெரியவில்லையா? நான்தான் செல்லம். உங்கள் அன்புக் காதலி நான்தான் சேகர்! இதோ நம் அன்பின் அறுவடை; நாம் அனுபவித்த இன்பத்தின் அடையாளம்! சேகர் உங்களுக்காக எத்தனை நாட்கள் காத்திருந்தேன் தெரியுமா?"—என்று உணர்ச்சி வேகத்தில் ஏதேதோ கூறிக்கொண்டே போனாள்.

"சட் அப்! சேகராவது, நாதராவது......! நான்சென்ஸ்......! கெட் அவுட்!" என்று கத்திக்கொண்டே வாசலின் பக்கம் கையைக் காட்டினார் கனம் சர்க்கார் வக்கீலான சேகர் அவர்கள்.

திடுக்கிட்டாள்; திகைத்தாள் செல்லம். ஆனால் மறுபடியும் அவர் காலில் விழுந்து அதைக் கண்ணீரால் கழுவினாள். விக்கிக் கொண்டே நான்தான் உங்கள்மனைவி! நான்தான் உங்கள்மனைவி! அனாதை என்னை விரட்டாதீர்கள். உங்கள் வீட்டுவேலைக்காரியாகவாவது இருக்க அனுமதியுங்கள்.......என்று கதறினாள்.

சட்டத்தின் வார்த்தைகளை உருப்போட்டு இறுகியிருந்த பாரிஸ்டர் சேகரின் மனசு இளகவில்லை. கால்களை உதறினார்; அவள் விடவில்லை; உதைத்துத் தள்ளினார். குழந்தையும் அவளும் படியில் உருண்டனர்! அப்போதும் அவள் கெஞ்சினாள், மன்றாடினாள்...! உங்கள் குழந்தைக்காக.... உங்கள் மகனுக்காக...! என்று அலறினாள்.

"மகன்....! யாரோ ஒரு பிச்சைக்காரனின் மகன்—ஒரு சோக் சுந்தரனின் மகன்...! இவனு என் மகன்...? நீயா என் மனைவி...! யாருக்கோ மனைவியாக இருந்து குழந்தையைப் பெற்றுக் கொண்டு இங்கேயா ஓடி வந்தாய்...? விபசாரி....!"—என்று கூவினன், புதிதாகப் பதவியேற்ற பப்ளிக் பிராஸிக்கியூட்டர்.

"நானு விபசாரி...?" என்று காதைப் பொத்திக் கொண்டு கத்தினுள் செல்லம்! ஆம், அவள் தாய்மை, களங்கமற்ற இதயம், மாசு படாத மேனி, ஒழுக்கம் காத்த அவள் உடம்பு உள்ளம் எல்லாம் அலறின!

'விபசாரியாக இல்லாவிட்டால் வேறு எவளாகவாவது இருந்துவிட்டுப்போ....! இன்னும் ஏன் இங்கு நிற்கிருய்....? கெட் அவுட்....! கெட் அவுட்....!' என்று மீண்டும் கத்தினுர் சேகர். அடுத்த விநாடி நடந்தவற்றைத் திக்பிரமையுடன் பார்த்துக்கொண்டுநின்ற தன் மனைவியை அழைத்துக் கொண்டு உள்ளே சென்ருர்.

கடலை கொரிப்பதுபோன்று சொற்களை வேகமாக கொரித்துக்கொண்டுவந்த பாரிஸ்டர் பரமானந்தன் இந்த இடத்தில் நிறுத்திவிட்டு என்னைப் பார்த்தார். பிறகு,

கனம் நீதிபதியவர்களே, ஜூரிமார்களே இந்தச் சம்பவத்தை நன்ருகக் கவனிக்கவேண்டும். நீங்கள் மட்டுமல்ல, காதல் தெய்வீகமானது-புனிதமானது-தியாகத் தன்மை வாய்ந்தது-ஏற்றத் தாழ்வை, அந்தஸ்தை உதறித் தள்ளக்கூடியது-செல்வத்தைக் கடந்தது-சாதி குலத்துக்கு அப்பாற்பட்டது-என்றெல்லாம் கதை யளக்கிருர்களே, காவியங்களை விரித்துக் காட்டுகிருர்களே, அந்தக் கனவான் களும் கவனிக்க வேண்டும் சேகரின் காதல் எங்கே?

செல்லம் ஏழை என்பதால்தானே-அந்தஸ்தில் தாழ்ந்தவள் என்பதால்தானே அவள் கொண்ட காதல் அறுபட்டு வீழ்ந்தது? இதே சேகர் இந்திராவைப்போன்ற ஒரு பெண் மேல் காதல் கொண்டால், அந்தக் காதல் இப்படிக் கருகி யிருக்குமா; அழிந்திருக்குமா? இல்லை, சிரித்திருக்கும். காதல் தெய்வீகமானது என்ருல்-அந்தஸ்தை நோக்காதது என்ருல்-செல்லம் உதைபட்டுப் படிக்கட்டுகளில் உருண் டிருக்கத் தேவையில்லை....!

அவனுடைய அந்தஸ்து-உயர்ந்தவட்டாரச் சூழ்நிலை-அமைத்துக்கொண்ட வாழ்க்கைமுறை-புதிய பதவி-எல்லாம் செல்லத்தை நிராகரிக்கச் செய்தது...; விபசாரி என்றுகூட சிறிதும் கூசாமல்-சொல்ல வைத்தது. அப்படியானல் இந்தக் காதல் எப்படிப்பட்டது....? இது இலக்கிய மன்ற மாக இருந்தால் அதற்கு விளக்கம் தருவேன்; இது நீதி மன்றம்; ஆனல் இந்தப் பிரச்னையை இங்கே ஏன் சுட்டிக் காட்டினேனென்ருல் வழக்குக்கும் இதற்கும் சம்பந்தம் இருப்பதால். இது இருக்க,

தாய்க்குலம் இருக்கிறதே அது மன்னிக்கும் சுபாவம் உள்ளது. தன்னைத் துரோகம் செய்துவிட்டு இன்னொருத் தியை மனைவியாக்கிக் கொண்டு மகிழ்ச்சியாக வாழ்கிருன் என்பதை நேரில் கண்டபிறகும் அவனை மன்னித்து, அவ னுடன் வாழத் தயாரானள். அவன் காலில் போய் விழுந் தாள். நீதான் என் இன்பம்-என் வாழ்க்கை-என்று எவ ளிடம் கூறினனே அவளிடமே 'நீ யார்?'-என்று திமிருடன் கேட்ட பிறகும் அவனை மன்னித்தாள்; அவனுடன் வாழத் தயாரானள்; மன்ருடினள். காதலி நீதான்-கட்டிக்கரும்பே, நீதான் - என் சிந்தையில் நிரம்பியிருக்கிருய்-என்று எவனை

மார்புடன் இறுகத் தழுவினுளே, அவளேயே காலால் உதைத்துத் தள்ளியபோதும் மன்னித்தாள். தன்னை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினுள். இதே சம்பவங்கள் ஆடவருக்கும் நிகழலாம். ஒரு பெண்ணின் காலால் உதைபட்டு உருளுவதைத் தவிர, அப்படி ஏற்படும்போது ஆடவர்கள் மன்னிப்பார்களா? மன்னிக்கமாட்டார்கள். அந்தச் சுபாவம் அவர்களுக்குக் கிடையாது! ஆனுல் தாய்க்குலம் மன்னிக்கும் சுபாவம் உள்ளது; எனவேதான் செல்லம் மன்னித்தாள்; மன்னித்தாள்; மன்னித்தாள்! ஆனுல், விபசாரி என்று கூறியவுடன் உள்ளத்தில் குடியிருந்த தாய்மை அலறியது; மன்னிக்கும் சுபாவம் இறந்தது....! மன்னிக்கும் இந்தப் பண்பு இறந்தால் அந்தத் தாய்க்குலம் எப்படி மாறும் தெரியுமா?'

பாரிஸ்டர் பரமானந்தன் இந்தக் கேள்வியுடன் நிறுத்தி விட்டுக் கைக் கடியாரத்தைப் பார்த்தார். அதுவரை கல்லாய்ச் சமைந்து அவர் சொன்ன வரலாற்றிலே நெஞ்சைப் பறிகொடுத்திருந்த நானும் மணியைப் பார்த்தேன். கோர்ட் கலேயும் நேரம் ஆகியிருந்தது. எழுந்தேன். உணர்ச்சியற்று மரம்போல் நடந்து சென்று காரில் ஏறினேன். பாரிஸ்டர் சொன்ன சம்பவங்களும், குறிப்பிட்ட நபர்களும் என் மனத் திரையில் காட்சியளித்துக்கொண்டிருந்தனர். செல்லத்தின் வரலாற்றைச் சொல்லிக்கொண்டு வரும் போது என் நெஞ்சு படபட என்று அடித்துக்கொண்டது.

கார் என் மாளிகைக்குள் நுழைந்து ஐந்து நிமிஷத்துக்கு மேலாகியும் நான் அதைவிட்டு இறங்கவில்லை. டிரைவர் கதவைத் திறந்து வைத்துக்கொண்டிருந்தான்.

நான் என் மாளிகைக்கு வந்துவிட்டேனென்றே, காரில் உட்கார்ந்திருக்கிறேன் என்றே எனக்குத் தெரியாது.

உணர்வுகள் மரத்துப்போயிருந்தன....நினைவுகள் மட்டும் எங்கேயோ....சுழன்றுகொண்டிருந்தன. பாரிஸ்டர் பரமா னந்தனின் ஒவ்வொரு சொல்லும் என் காதில் கணீர் கணீர் என்று ஒலித்துக்கொண்டிருந்தன.

மனைவி வந்து, என்ன அப்படியே உட்கார்ந்துவிட்டீர் களே?'-என்று கேட்டபிறகுதான் திடுக்கிட்டுத் தன் னுணர்வு வரப்பெற்றேன்.

## இரண்டாம் நாள்.

வழக்கம்போல் என் ஆசனத்தில் வந்தமர்ந்தேன். பாரிஸ்டர் பரமானந்தனைப் பார்த்தேன், என்னையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தவர் மெதுவாகப் புன்னகை செய் தார்.

'மிஸ்டர் பரமானந்தன் தொடரலாம்!' - என்றேன். அவர் எழுந்தார். :மறுகணம் கணீரென ஒலித்தது அவரது குரல்.

'நீதிபதியவர்களே, நேற்றையதினம், காதலனால் கை விடப்பட்ட செல்லத்தின் வரலாற்றிலே ஒரு பகுதியைச் சொல்லி முடித்தேன். இன்று மறு பகுதியைச் சொல்லப் போகிறேன். சொல்லி முடித்த பிறகுதான் இந்த வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள்-அவர்களுடையவாழ்க்கை-இன்னும் பல விஷயங்களை அறிய முடியும்; அறிந்துகொள்வதோடு மட்டுமல்ல, இன்னும் பல முக்கிய நிகழ்ச்சிகள் நடக்கும்.

மன்னிக்கும் சுபாவம் உள்ள தாய்க்குலம், அந்தப் பண்பை இழந்துவிட்டால் அது எப்படி மாறும் தெரியுமா?- என்ற கேள்வியுடன் நிறுத்தினேன். ஆம் செல்லம் என்ன செய்தாள்-எப்படி மாறினாள் என்பதைச் சொல்லத்தான்

போகிறேன். அதற்கு முன்னுல் இன்னெரு விஷயத்தையும் கவனப்படுத்துகிறேன்.

இந்தச் சமுதாயம் இருக்கிறதே...சீமான்களுக்காக இருக்கும் இந்த சமுதாயத்தைத்தான் குறிப்பிடுகிறேன். இது விசித்திரமானது, வேடிக்கையானது, அநீதியானது, கொடுமையானது என்று கூறினுல் கோபம் குமுறுகிறது சீமான்களுக்கு. சீறுகிருர்கள். அந்தஸ்து பெற்ற கனவான் கள் அலறுகிருர்கள். அவர்கள் அலறட்டும்; கொக்கரிக்கட் டும்! ஆனுல் இந்தச் சமுதாயம்-அதன் அமைப்பு கொடுமை யானது; அநீதியானது என்பது உண்மை! உண்மை!! இந்தச் சமுதாய அமைப்பு நீதியானது என்ருல்-நியாயமா னது என்ருல்-சிறந்தது என்ருல்-தோகை ஒருவளின் வாழ் வைத் துயரத்திலாழ்த்தியவனை பாராட்டியிருக்குமா? வனிதை ஒருவளின் வாழ்வை வஞ்சித்தவனை வகையான வாழ்வில் வைத்திருக்குமா? சத்தியத்தை மறந்தவனின் வாழ்வைச் சந்தோஷமாக்கிக் கொடுத்திருக்குமா? ஒரு பாவமும் அறியாத பாவையை உதைத்துப் படிக்கட்டில் உருளவைத்த ஒருவனுக்கு உயர்ந்த பதவி கொடுத்து பாராட்டியிருக்குமா? தனக்கே காதலியாக இருந்தவளை விபசாரியென்றும், தனக்கே பிறந்த மகனை ஒரு சோக் சுந்தரனின் மகனென்றும் அகம்பாவத்துடன் சொன்ன வனை அறங் கூறும் மன்றத்துக்குச் சர்க்கார் வக்கீலாக்கி யிருக்குமா? இதிலிருந்து நீங்களே ஒரு முடிவுக்கு வாருங் கள். இந்தச் சமுதாயத்தைப்பற்றி. இந்தக் கொடுமையான சமுதாயம் தன் எண்ணத்தை நிறைவேற்றும்; தனது இலட்சியத்தை ஈடேற்றும் என்று நம்பிக்கைகொண்டாள் கண்ணீர் சிந்தும் கண்களுடன் நின்ற செல்லம். அந்த இலட்சியம் என்ன?'-

'விபசாரி'-என்று கூறிவிட்டுத் திமிருடன் உள்ளே சென்ற தன் மாஜி காதலனை ஒரு பார்வை பார்த்தாள், அந்தப் பைங்கிளி அந்தப் பார்வையிலிருந்து நெருப்புப் பறந்தது! ஆம், கற்பின் கனல் சுடர்விட்டுப் பிரகாசித்தது. அதேசமயத்தில் ஏற்கனவே சிதைந்துகிடந்த உள்ளம் சுக்கு நூருக நொறுங்கியது. நெஞ்சிலே நஞ்சைக் கொட்டி விட்டுச் சென்ற அந்தப் பாரிஸ்டரைப் பழிவாங்கவேண்டு மென்ற எண்ணம் நொறுங்கிப்போன அந்த உள்ளத்தில் முளைத்தது. எழுந்தாள்; நடந்தாள்; கால்போன திக்கில் நடந்துகொண்டேயிருந்தாள்; எங்கே போகிறோம் என்று தெரியாமலே நடந்துகொண்டிருந்தாள்! சட்டம் படித்த பாரிஸ்டராகிய நீ என்னை இக்கதிக்கு ஆளாக்கினுய்; துரோகம் செய்தாய்; காலால் உதைத்துத் தள்ளினுய்; விப சாரி என்று கூறினுய். ஆனுல் இதோ அந்த மகன்-யாரோ ஒரு சோக் சுந்தரனின் மகனென்று கூறினுயே அந்த மகன்-உன்னை பழிக்குப்பழி வாங்குவான்; உன் துரோகத் தைப் பலரறிய அம்பலப்படுத்துவான். நீதி மன்றத்திலிரு ந்து நீதிக்காகப் போராட நீ தகுதிவாய்ந்தவனல்ல என்று நிரூபிப்பான். அநீதியை உள்ளத்திலும், உணர்விலும் அரசோச்சவிட்டுக்கொண்டிருக்கும் உன்னை நீ என் மகன் தான் என்று கூற வைப்பான். நீ படித்துக்கொண்டிருக் கும்போது என்னைக் காதலித்தாய்; பாரிஸ்டராகிவிட்ட பிறகு என்னைக் கற்பழித்தாய். அதே பாரிஸ்டராக இருந்து கொண்டு நீ கற்பழித்த கதையைக் கூறுவான். நமக்குள் நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் பலருக்கு முன்னுல் கூறுவான் உன் மகன்....! அவனை அந்த நிலைக்குக்கொண்டு வந்து உன்னைப் பழிவாங்க வைப்பேன். நீ அவமானத்தால் குன்றிக் கூனி முகம் வெளுக்க உட்கார்ந்திருப்பதைப் பார்த்து நான் 'கல கல' எனச் சிரிப்பேன்.......!

இந்தக் காட்சியைக் காணும் வரை நான் உயிர் வாழ்வேன் இதுதான் என் இலட்சியம்-என்று சூளுரைத்துக்கொண் டாள் மனதிலே.

நடந்த களைப்பு — வயிற்றைக் கிள்ளும் பசி — செல் லத்தை மேலும் நடக்க விடவில்லை. அங்கே யிருந்து ஒரு திண்ணையில் உட்கார்ந்தாள். அவளுடைய பசியைவிட மகனை எப்படியாவது வளர்க்கவேண்டும்—பாரிஸ்டருக்குப் படிக்க வைக்கவேண்டும். அதற்கு என்ன செய்வது என்ற பிரச்னையே முன்னுக்கு நின்றது. இந்தச் சமுதாயம் அதற்கு உதவாதா? நீதிக்காக — நியாயத்துக்காக — போராட ஒரு வனை பாரிஸ்டராக்காதா? எனது இலட்சியத்தை ஈடேற்ற இந்த சமுதாயம் துணை நிற்காதா? துணை நிற்கும்; எனக்கு உதவும்!—என்று நினைத்தாள்; நம்பினாள்....! ஆனால் இப் போது என்ன செய்வது? என் பசியையும், குழந்தையின் பசியையும் அடக்க என்ன செய்வது?-என்று யோசித்தாள். வேலை செய்து பசியை ஆற்றலாம்; ஆனால் வேலை செய்வ தற்கும் உடம்பிலே தெம்பு வேண்டுமே? சிறிதளவாவது பசி யடங்கினால்தானே எங்கேயாவது சென்று வேலை கேட்கலாம். தான் உட்கார்ந்திருந்த வீட்டிலேயே ஏதும் கேட்டு வாங்க லாமா என்று எண்ணினாள். வாசலில் போய் நின்றுகொண்டு எப்படிக் கேட்பது என்று சிந்தித்தாள். பிச்சை எடுத்துப் பழக்க மிருந்தால் தானே ஓடிவந்திருக்கும் வார்த்தைகள். ஆனால் அவள் பிச்சை எடுக்கும் தொழிலுக்குப் புதியவள். தயங்கினாள். கடைசியாக "அம்மா....! அம்மா....!" என்று கூப்பிட்டே விட்டாள். உள்ளே யிருந்து ஒரு பெண் வந்தாள்.

"பசிக்கிறது அம்மா....குழந்தையும் நானும் இரண்டு நாட்களாகப்பட்டினியம்மா"—என்று ஒருவாறு சொல்லி முடித்தாள்.

அந்தவீட்டு அம்மாளும் ஒரு ஏழை. அவளுக்கு இருதயம் இருந்தது. இரும்பாகஅல்ல, மெழுகுபோல, அது உருகிற்று. 'சரி இரு!' என்று சொல்லி கொஞ்சம் கஞ்சி கொண்டுவந்து கொடுத்தாள். அதைச்சாப்பிட்டாள்; மகனுக்கும் ஊட்டினுள். அப்போது தனக்குள் என்ன சொல்லிக்கொண்டாள் தெரியுமா? 'சீமானின் மகனே, உன் அப்பா விருந்து வைத்தார் பலருக்கு; நீ இப்போ வீதியிலே-யாரோ ஒருவருடைய வீட்டிலே பிச்சை எடுத்துச் சாப்பிடுகிருய்...உனக்கு இது ஆச்சர்யமாக இல்லையா?-இப்படிப் பேசிக்கொண்டாள்.

அன்றிரவை அந்த வீட்டிலேயே கழித்துவிட்டு, விடிந்ததும் வேலை தேடும் படலத்தை ஆரம்பித்தாள். யாரும் அவளுக்கு வேலை கொடுக்க விரும்பவில்லை. குழந்தையுடன் போன அவளுடைய கழுத்தைக் கவனித்தனர் சிலர். அங்கே மாங்கல்யம் இல்லை. 'விதவையா?' என்று கேட்டார்கள். அவள் எப்படிச் சொல்வாள்? கணவன் கல்லுப்போல அந்தச் சென்னை நகரத்திலே-அடையாற்றுப் பங்களாவிலே-ஆனந்தமாக வாழ்ந்துகொண்டிருக்கிருன். அவனை இறந்துவிட்டானென்று சொல்ல முடியுமா? ஆகவே அவள் மௌனம் சாதித்தாள். அவளுடைய மௌனத்தைக் கண்டதும் நடத்தைப் பிசகுள்ளவள், வீட்டில் வேலைக்கு வைத்துக்கொண்டால் நமக்கு அவமானத்தை வாங்கித் தந்துவிடுவாள் என்று எண்ணி விரட்டினர். இன்னும் சிலர், 'அனுதை!' என்றதும் அனுதைகளை நம்பக்கூடாது. ஊர்பேர் அறியாதவர்களை வேலைக்கு வைத்துக்கொண்டால், வேலை செய்வதாகப் பாவனை காட்டிவிட்டு முழுங்குறதையும் முழுங்கிவிட்டு கண்ணில் பட்டதை திருடிக்கொண்டு போய்விடுவார்கள் என்று வேலைக்கு எடுத்துக்கொள்ளவில்லை.

இப்படியாக அவள் அலைந்தாள். வேலை கிடைக்கவில்லை. ஆணாக இருந்தால், மூட்டை சுமக்கச் சென்றிருப்பாள்; வண்டியிழுத்திருப்பாள்; வேறுஎதையாவது செய்திருப்பாள். அவள் பெண்! நம்நாடு என்ன ரஷ்யாவா? அரசாங்கம் அன்புடன் அவர்களையெல்லாம் ஆதரிக்க! புண்ணியபூமி-ஆஸ்திகர்கள் வாழும் க்ஷேத்திரபூமி-திருவண்ணாமலையானும், திரு அரங்கத்தானும், தில்லைவாழ் நடராஜனும், திருப்பதி ஐயனும் வாழும் நாடு-இங்கே ஆண்களின் துணையில்லாது பெண்கள் என்ன செய்ய முடியும்? பிச்சையெடுத்து வாழ வேண்டும்; அல்லது கற்பை விற்று வாழவேண்டும்; ஆம் பிச்சையெடுத்தாள், சீமானின் சிந்தைக்கினியவளாக இருந்த காதலி....!

இந்தப் பிச்சைத்தொழிலிலிருந்து தனது இலட்சியத்தை எப்படி நிறைவேற்ற முடியும்? அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. கடைசியாக தன்னுடன் படித்த ஒன்றிரண்டு தோழிகளின் உதவியை நாடலாம் என்று அவர்களிடம் ஓடினாள். அவர்கள் இவளுடைய நிலையைப்பார்த்து இரக்கப்பட, செல்லத்தின் அனுபவம் அவர்களுக்கு இல்லையே! மேலும் சீமான் வீட்டுச் சிங்காரிகள். எனவே சிரித்தனர்; கற்பை விலை கூறியவள், ஒழுக்கம் கெட்டவள், தாழ்ந்த குலத்தில் பிறந்தவள்தானே; தாழ்ந்த புத்திதானே இருக்கும் எனவே தான் கற்பின் உயர்வு தெரியாமல் தாலி பெறுவதற்கு முன்பே ஒரு குழந்தைக்குத் தாயாகி, இப்போது இங்கு வந்து விட்டாள், எங்கள் மானத்தையும் போக்க!-என்ற விமர்சனம் தான் வந்தது; ஏமாந்தாள்; என்றாலும் மேலும் வைராக்கியம் ஏற்பட்டது!

தோழிகளாலும், சமுதாயத்தாலும் நிராகரிக்கப்பட்ட செல்லம் செய்வதென்னவென்றறியாது விழித்தாள்.

தனது பாலகனைப் படிக்க வைப்பது எப்படி என்பது ஒரு பக்கத்திலிருக்க, வாழ்வது எப்படி என்ற பிரச்னைதான் அவளை வாட்டத் துவங்கியது. சில நாட்களாகப் பிச்சை எடுத்து பிழைத்து வந்தவள், இப்போது அந்தப் பிச்சையும் கிடைக்காது ஏங்கினள்; துடித்தாள்; துவண்டாள்; பாலகன் ஒருவனுடன், ஒரு பாவமும் அறியாத பாவை ஒருத்தி அனாதையாக சுற்றுகிறாளே, அவளை வாழ வைக்க வேண்டுமே என்று இந்தச் சமுதாயம் எண்ணிப் பார்க்க வில்லை. சமுதாயம் என்ற சங்கத்திலே அவளும் ஒரு உறுப்பினள் தானே; அவளைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு நமக்கிருக்கிருக்கிறதே என்று சிந்தித்தும் பார்க்க வில்லை இந்தச் சமுதாயம். இன்றையச் சமுதாயத்துக்கு உள்ளம் இருக்கிறது; ஆனால் அங்கே இரக்கம் இல்லை; கருணை யில்லை; பொறுப்புணர்ச்சி இல்லை. இப்படிப்பட்ட சமுதாயத்திலே தன் இலட்சியத்தை நிறைவேற்ற வகை யில்லை, என்பதை உணர்ந்தாள் அந்த அபலை. என்ன செய்வதென்று திகைத்தாள்.

குபேரபுரி வாசி யொருவர் அனாதை ஆஸ்ரமம் ஒன்று நடத்தி வந்தார். அங்கே போனால் இடம் கிடைக்குமென்று அறிந்தாள். உடனே அங்கு சென்றாள். ஆசிரமத்தின் பிரதமநிர்வாகியாக இருந்த ஒருவயது முதிர்ந்த பெண்ணிடம் தனக்கு இடமளிக்கும்படி வேண்டினாள் செல்லம்.

“உன்னைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது. ஆனால் இங்கே இடமில்லையே.......! உனக்காக வருந்துகிறேன்!“—என்றாள் அந்த அம்மா.

இந்தச்சமயத்தில் அங்கு வந்தார் ஆஸ்ரமத்தின் தலைவர். செல்லத்தைப் பார்த்தார். மறு விநாடி அவளுக்கு தனியாக

ஒரு அறை கொடுத்து, நல்ல முறையில் கவனித்து வரும்படி கட்டளையிட்டார் நிர்வாகிக்கு. தலைவரின் உத்திரவுக்குத் தலை வணங்கி செல்லத்தை அழைத்துச் சென்றாள் நிர்வாகி யான அந்த அம்மா. செல்லம் தன் மனசுக்குள் ஆஸ்ரமத் தலைவரை வாழ்த்தினாள். போகும்போது திரும்பிப் பார்த்து தன் விழிகளால் தலைவருக்கு நன்றி செலுத்தி விட்டுச் சென்றாள். அத் தலைவரோ புன்னகை செய்தார்.

நாட்கள் சென்று கொண்டிருந்தன. நல்ல கவனிப்பு, வேளா வேளைக்குச் சாப்பாடு, அலைச்சல் உலைச்சலில்லாத அமைதியான சீவியம். இத்தகு நிலையில் அதுவரை அஞ் ஞாத வாசம் செய்த செல்லத்தின் உடல் மினுமினுப்பும் புது மெருகுடன் மீண்டும் காட்சியளித்தது. தளர்ந்திருந்த தளிர்மேனி மீண்டும் இளமையுடன் பளபளத்தது. அவ ளுடலின் எந்தப் பாகத்திலும் சுருக்கம் கிடையாது; ஆனால் உள்ளம் மட்டும் சுருங்கி யிருந்தது. சுருங்கி யிருந்த ரோஜா விரிந்து மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருந்தால் எப்படி யிருக்குமோ அதுபோல இருந்தாள் செல்லம்.

உள்ளத்தில் கள்ள நினைப்புடன் செல்லத்துக்கு இட மளித்த ஆஸ்ரமத் தலைவருக்கு அவளைக் காணக் காண பற் பல எண்ணங்கள் படையெடுக்கத் துவங்கின. அவள்மேல் உள்ள ஆசை நாளாக ஆக வளர்ந்து கொண்டேயிருந்தது. செல்லத்தை எப்படியாவது தன் அணைப்புக்கு ஆளாக்கி விட வேண்டுமென்று துடித்தார். அவளைக் காண்பதற்காக அடிக்கடி ஆஸ்ரமத்துக்கு வருவார். அவளுடன் சரஸ மாகவும், சாகஸமாகவும் பேசுவார். ஆனால் அதை வித்தி யாசமாக எண்ணமாட்டாள் செல்லம்.

ஆஸ்ரமத் தலைவருக்கு இளம் பெண்களின் மனதைத் தடவிப் பார்த்து அவர்களின் பண்பை—குணத்தை—அறி

யும் அனுபவம் நிறைய உண்டு இந்த முறையில் செல்லத்தின் உள்ளத்தையும் தடவிப் பார்த்தார். அது நெருப்பாக இருந்தது. சுட்டது! திகைத்தார். என்றாலும் தீதான எண்ணம் அவரை விட்டுப் போகவில்லை. செல்லத்தை எப்படியாவது தனது பள்ளியறைக்குக் கொண்டு வந்து விட வேண்டுமென்று தீர்மானித்தார். அதற்கான திட்டமும் தீட்டினர்.

இந்த இடத்தில் நிறுத்தி விட்டு கோர்ட் ஹாலெங்கும் தன் விழிகளைச் சுழற்றினர் பாரிஸ்டர் பரமானந்தன். "கோர்ட்டார் அவர்களே இதை நீங்கள் நன்ருகக் கவனிக்க வேண்டும். அனுதையாக வந்தவளை—அடைக்கலம் தேடி வந்தவளை—தீண்ட வேண்டும் என்று திட்டம் தீட்டியவர் எப்படிப்பட்டவர் தெரியுமா? சாமானிய மனிதரல்ல; நம்மைப் போன்றவருமல்ல. அனுதை விடுதி வைத்து நடத்தும் ஒரு தனவந்தர். தடியூன்றும் பருவத்தை நோக்கி விரைவாக நடப்பவர். கடவுள் பக்தர் மட்டுமல்ல, காந்தி பக்தரும்கூட; கதர் உடுத்துபவர். காந்தியாரின் படத்தையும், விவேகானந்தரின் படத்தையும் கடவுள் படத்துக்கு அருகில் வைத்து பூஜித்து வருபவர். சன்மார்க்க சங்கத்துக்குத் தலைவர். பெரிய மனிதர்—பரோபகாரி—கருணை வாய்ந்தவர்—கண்ணியம் மிக்கவர்—என்றெல்லாம் மக்களால் போற்றப் படுபவர். அப்படிப்பட்டவர்தான் செல்லத்தைச் சீரழிக்கத் திட்டம் தீட்டினர். செல்லத்தை மட்டுமல்ல, அனுதை ஆஸ்ரமத்தின் பேரால், அடைக்கலம் புகுந்த எத்தனையோ எழிலரசிகளின் கற்பைச் சூறையாடியவர். இவரைத்தான் இந்தச் சமுதாயம் முன் சொன்னவாறு பாராட்டிப் போற்றிப் புகழ்ந்தது! அந்தப் புண்ய சீலர் தான் புல்லத்தனமான தீர்மானம் கொண்டார்.

பக்தியையும், சீலத்தையும், அருளையும் வளர்க்கின்ற அறமன்றங்கள் என்று கூறப்படும் மடங்களை மாதர்களோடு கூடும் விபசார மடமாக்கி வைத்திருக்கிறார்களே மடாதிபதிகள், முற்றும் துறந்த முனிவர்கள் போல் வேஷம் தாங்கி, மோட்சத்துக்கு வழிகாட்டுகிறோம் என்று சொல்லி மோகனாங்கிகளைப் பார்த்து முறுவல் செய்கிறார்களே ஆண்டவன் அடியார்கள், ஆசாபாசத்தை அறுத்தெறிந்தவர்கள் என்று கூறிக்கொண்டு சந்தனக் கட்டிலிலும், சரஸமாடக் கன்னியும், கற்கண்டிலிட்ட பாலும், வெள்ளித் தட்டில் பழமும், தங்க உருத்திராட்சமும், வெள்ளியினால் செய்த பாதக் குறடும் கொண்டு வாழ்கிறார்களே ஆலய அதிபர்கள், அவர்களை யெல்லாம் பக்தியுடன் போற்றிப் பூஜித்துக் கொண்டிருக்கிற நம் சமுதாயம் அனாதை ஆஸ்ரமத் தலைவரான அம்பலவாணரைப் போற்றி புகழ்ந்ததில் விந்தை யென்ன?

ஆம், அவர் பெயர் அம்பலவாணர்தான். அந்த ஆண்டவனின் பெயரைத்தான் தாங்கிக்கொண்டிருந்தார். திருட்டுப் பூனையின் குணம் கொண்ட திருவாளர் ஆஸ்ரமத் தலைவர். அந்த ஆண்டவனின் பெயருள்ளவருக்கு, அவனுடைய குணமும், நடத்தையும் ஒருங்கே இருக்கத்தானே செய்யும்? பக்கத்திலே பார்வதி இருக்க, முடியிலே கங்கை என்ற மங்கை இருக்க இந்த இரண்டுமங்கையரும் போதாது என்று தாருகாவனத்து தளிர்க்கொடியாள்களின்மேல் ஆசைகொண்டாராம் அம்பலவாணன் என்று அழைக்கப்படும் நமது ஆண்டவன். முனிவருக்கு பணி செய்துகொண்டிருந்த அவர் தம் மனைவிமார்களுடன் விளையாடினதோடுவிட்டாரா வேல் முருகனின் தந்தை? தனது பக்தர்களின் பத்தினிமாரைக் கூடக் கேட்டாராம். இயற்பகை நாயனாரைப்பற்றிக் கூறும் புராணம் சொல்லுகிறது. அந்தச் சிவபுராணங்களிலே சித்

தத்தைப் பறிகொடுத்த சைவ மெய்யன்பரான நமது அம்பலவாணரும், ஆண்டவன் பாதையில் செல்வதைப்பற்றிக் குறைகூற முடியுமா?

ஒருநாள் இரவு, தன் மைந்தனுடன் அயர்ந்த துயிலில் ஆழ்ந்திருந்தாள் செல்லம். இரு முரடர்களுடன் அந்த அறைக்குள் நுழைந்தார் அம்பலவாணர் அரவம் செய்யாமல். அடுத்த விநாடி அவள் வாயில் துணி திணிக்கப்பட்டது. கைகால்கள் கட்டப்பட்டன. சிறிது நேரத்துக்கெல்லாம் அம்பலவாணரின் படுக்கை அறைக்குக் கொண்டு வரப்பட்டாள் செல்லம்.

பிறகு என்ன நடந்தது என்று நான் வர்ணிக்க விரும்பவில்லை. ஒரே வார்த்தையில் கூறிவிடுகிறேன். செல்லம், பலாத்காரமாகக் கற்பழிக்கப்பட்டாள் அம்பலவாணரால்.

கற்பழிக்கும் படலம் முடிந்தது. அம்பலவாணர் சொன்னார். 'செல்லம், உன்மேல் அடங்காத காதல் கொண்டுவிட்டேன். ஆனால் நீ என் காதலுக்கு இணங்கமாட்டாயென்று எண்ணித்தான் இந்த முறையைக் கையாண்டேன். இதை நீ....!' என்று கூறிக்கொண்டே அவள் வாயிலிருந்த துணியை எடுத்தார்.

'களுக்' கென்று சிரித்தாள் செல்லம். அதைத் தொடர்ந்து 'கல கல' எனறு அவளுடைய சிரிப்பொலி அறையெங்கும் ஒலித்து நின்றது. அம்பலவாணர் திகைத்துவிட்டார். சீறுவாள் என்று எதிர்பார்த்தவர், சிரித்துக்கொண்டிருப்பதைக் கண்டதும் ஏன் திகைக்கமாட்டார். 'கோபச் சிரிப்போ-'என்று கவனித்தார் ஒரு விநாடி. அது கோபச் சிரிப்பல்ல, குளிர்ச்சியாக இருந்தது. சிரித்துவிட்டுச் சும்மாயிருந்துவிடவில்லை செல்லம். அவருடைய மார்பிலே சாய்ந்துவிட்டாள். அம்பலவாணருக்கு ஒன்றுமே புரியவில்லை...!

'திகைக்காதீர்கள். முதலில் என் கையை அவிழ்த்து விடுங்கள்....!' என்ருள் புன்னகையுடன்!

தான் காண்பது கனவோ, நினைவோ என்று ஆச்சர்யத்துடன் செல்லத்தின் கரங்களை அவிழ்த்தார். அடுத்த விநாடி அவளுடைய கரங்கள் அம்பலவாணரின் கழுத்தைக் கட்டிப் பிடித்துக்கொண்டன

'நீங்கள் இப்படிச் செய்திருக்கத் தேவையில்லை! என்னை ஒரு சொல் கேட்டால், போதுமே? என் படுக்கை அறைக்கு வா என்று அழைத்தால் நான் ஓடி வந்திருக்கமாட்டேனு?— உங்கள் மேல் எனக்கும்....!'-என்று சொல்லிக்கொண்டே அவரைக் கொஞ்சினுள்; அவர் மார்பில் சாய்ந்தாள்; துவண்டாள்; புரண்டாள்.

அம்பலவாணருக்கு 'ஷாக்' அடித்த மாதிரியிருந்தது. காண்பது கனவுதானே என்ற சந்தேகம் மீண்டும் வந்து விட்டது. கண்களைக் கசக்கிக்கொண்டு பார்த்தார்; தன்னைக் கிள்ளிப் பார்த்துக்கொண்டார்.

அவர் சந்தேகத்தைக்கண்டு மீண்டும் 'கல கல' எனச் சிரித்தாள் செல்லம். 'கனவல்ல கனவானே நனவுதான். நான் இப்படி நடந்துகொள்வதைப்பார்த்து நீங்கள் ஆச்சர்யப் படத்தான் செய்வீர்கள். ஆனுல்...! என்னை ஆதரித்தீர்கள்; அடித்துத் துரத்தப்பட்டேன், அனுதையாகத் திரிந்தேன். அப்படிப்பட்ட என்னை ஆதரித்து அன்பு காட்டி கவலையற்றவளாகச் செய்தீர்கள். அப்படிப்பட்ட உங்கள்மேல் எனக்குப் பாசம் இருக்காதா? நன்றியிருக்காதா? நானே தீண்டப்படாத வகுப்பைச் சேர்ந்தவள். அப்படியிருந்தும் என் மேல் அக்கரைகாட்டிக் கவனித்து வந்தீர்கள்! உங்கள் இஷ்டத்தை நான் தடுப்பேனு? இந்த அனுதைமேல் தாங்கள் கொண்ட விருப்பத்தை நான் வெறுப்பேனு....? என்ருள்.

அம்பலவாணருக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. அப்படியே அவளை அணைத்துக் கொண்டார். 'உன் மனசை அறியாமல் போனேனே என் இன்பக்களஞ்சியமே!' என்றார்.

'கண்ணாளா...' என்றாள் செல்லம்.

'கட்டிக் கரும்பே....!' என்றார் வாஞ்சையுடன் அவர்.

'உங்கள் விருப்பம் நிறைவேறிவிட்டது. ஆனால் என் விருப்பம்....!;

'என் தயங்குகிறாய்? சொல்லு! உன் விருப்பம் என்ன சொல்! இந்த விநாடியே நிறைவேற்றுகிறேன்!'

'அப்படி பெரிய விஷயமொன்றுமில்லை. இன்றிருப்பது போலவே, என்றும் இருக்க விரும்புகிறேன்!'

'மனைவியாகவா....ஐய்யய்யோ...! ஆடியபாதா...! நான் தான் கலியாணம் செய்து மருமகன்கூட இருக்கிறானே....! மனைவி கல்லுப் பிள்ளையார் மாதிரி இன்னும் இருக்கிறாளே!'

'மனைவியாக இல்லாமல் இப்படியே சந்தோஷமாக இருக்க முடியாதா?....என்னை...ஆசைநாயகியாக...வைத்துக் கொண்டாலே போதுமானது!'

'இப்ப சொன்னே பாரு, அது சரி! அப்படியே செய்கிறேன்.

'நான் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவளொன்று!'

'கவலையில்லை! பறையன் நந்தனை ஆட்கொண்ட அம்பலத்தரசனின் பக்தன் இந்த அம்பலவாணன். தீண்டப்படாத வகுப்பைச் சேர்ந்தவளாயிருந்தாலென்ன; தித்திக்கும் நீ வேம்பல்லவே கசப்பதற்கு; செல்லம் அதைப்பற்றிக் கவலைப்படாதே! நீ இனி ஆஸ்ரமத்திலிருக்கவும் வேண்டாம்.

வேறு ஒரு வீடு உனக்குத் தருகிறேன். அங்கேயே நீயும், உன்மகனும் சந்தோஷமாக இருங்கள்; எனக்கும் சந்தோஷத்தைத் தாருங்கள்!' என்றார், அம்பலவாணர்.

அன்றிலிருந்து, ஆடியபாதன், அம்பலத்தரசன் என்று கூறப்படும் ஆண்டவனின் மெய்யன்பரும் பக்தருமான ஸ்ரீமான் அம்பலவாணருக்கு ஆசைநாயகியாகிவிட்டாள் பாரிஸ்டரும், பப்ளிக்பிராஸிக்யூட்டருமான சேகரின் மாஜி காதலி செல்லம்! அவள் அப்படித் திடீரென அம்பலவாணரின் ஆசை நாயகியாய் விட்டது உங்களுக்கு ஆச்சர்யத்தை அளிக்கலாம். ஆனால் இந்த நிலையிலிருக்க ஏன் விரும்பினாள்? என்ற வினவுக்குரிய விடையை அறிந்தால் ஆச்சர்யம் எழாது.

காதலனால் மறுக்கப்பட்டாள் செல்லம். அப்போதும் தன்னை விற்க எண்ணியது கிடையாது. அந்தக் காதலனால் விரட்டப்பட்ட போதும் தன் கற்பை விற்க வேண்டுமென்று நினைத்தது கிடையாது; சமுதாயத்தால் விரட்டப்பட்ட போதும் யாருக்கும் ஆசைநாயகியாக இருக்க வேண்டுமென்று கனவு கண்டதும் இல்லை. என்றாலும், இப்போது அந்த நிலையில் தன்னை ஒப்படைத்துவிட்டாள் ஆஸ்ரமத் தலைவரிடம். ஆஸ்ரமத்தில் அடைக்கலம் புகும் போதுகூட அவளுடைய இதயம் பாழ்பட்டிருக்கவில்லை. பசுந் தூய்மையுடன் இருந்தது. காதலனால் கைவிடப்பட்ட அந்தக் காரிகை, தனக்குத் துரோகம் செய்தவனுக்குத் தகுந்த பாடம் கற்பிக்க தன் பாலகனைப் பாரிஸ்டராக்க வேண்டுமென்று கனவு கண்டாள். ஆனால் அந்தக் கனவு நிறைவேறாது என்று தெரிந்த சமயத்தில்கூட மற்றவர்களின் அணைப்புக்கு இணங்க வேண்டுமென்ற எண்ணத்தை மறந்தும் இதயத்தில் இருத்திக்கொண்டது இல்லை. ஆஸ்ரமத்திலிருக்கும்போது இனி என்ன செய்யலாம்-தன்

இலட்சியத்தை எப்படி நிறைவேற்றலாம் என்று தான் எண்ணிக்கொண்டிருந்தாள். சமூகத்தால் காப்பாற்றப் படாத-அந்தச் சமூகம் அனுதைகளை அன்புடன் வரவேற்று அடைக்கலம் கொடுத்து, அமைதியான வாழ்வையும் கொடுக்கிறுர் இந்த ஆஸ்ரமத்தலைவர். இவருடைய உள்ளம் எவ்வளவு விரிந்தது; கருணை நிறைந்தது; இரக்கம் உள்ளது! என்று வெளியில் உள்ள மக்கள் நினைப்பதுபோலத்தான் செல்லமும் நினைத்தாள். வரலாற்றையும், இலட்சியத்தையும் எடுத்துக் கூறி உதவி கேட்கலாமா....? என்று பல நாட்கள் சிந்தித்துக்கொண்டிருந்தாள். இந்தச் சமயத்தில்தான் அவள் கடத்தி வரப்பட்டாள் அம்பலவாணரின் கட்டிலறைக்கு! அப்போதுதான் அவள் உணர்ந்தாள் அம்பலவாணரின் சுயரூபத்தை! புள்ளிமான் தோல் போர்த்த புலி, ஆட்டின் உருவம் கொண்ட ஓநாய், இந்த அம்பலவாணர். காந்தியின் பெயரைச் சொல்லிக்கொண்டு, கதரை அணிந்துகொண்டு எத்தனையோ கனவான்கள் கள்ள மார்க்கெட் வியாபாரம் செய்கிறுர்களே-பக்தர் வேடம் பூண்டு பகல் கொள்ளை யடிக்கிறுர்களே-துறவியின் தோற்றம் கொண்டு தோகை யர் இன்பத்தை அனுபவிக்கிறுர்களே-உதட்டில் புன்னகை யை நெளியவிட்டுக்கொண்டு உள்ளத்தில் நஞ்சை வைத்துக் கொண்டிருக்கிறுர்களே வஞ்சகர்கள்-அவர்களைப் போலத் தான் அம்பலவாணரும். இவரைப்பற்றி நாம் நினைத்ததெல் லாம் தவறு. இத்தகையவர் நம் இலட்சியத்தை எங்கே நிறைவேற்றப் போகிறுர். ஒருக்காலும் நடக்காது என்று நினைத்தாள்.

தன்னைக் களங்கப்படுத்த-தன் கற்பைச் சூறையாட-தன் அந்தப்புரத்துக்குக் கொண்டுவந்த அம்பலவாணரின் மேல் அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ஆனுல்,

அவளால் ஒன்றும் செய்ய முடியவில்லை. தான் பலாத்கார மாகக் கற்பழிக்கப்படும் நிலையில் இருப்பதைக் குறித்து அவள் உள்ளம் துடித்த வேகம் இருக்கிறதே-அவள் அல றிய ஓலம் இருக்கிறதே-கற்பைப்பற்றிக் கதையளக்கும் கன வான்களுக்கும் தெரியாது; அம்பலவாணருக்கும் தெரி யாது. தப்புவதற்கு வழியுண்டா என்று யோசித்தாள். தான் தீண்டப்படாதவள் என்று சொல்லலாமா? என்று நினைத்தாள். சாதிப் பிரச்னையும், ஏழை பணக்காரன் வேற்றுமையும் எந்த அந்தப் புரத்திலும் கிடையாதே! இங்கே என்ன வாழப் போகிறது. அதுவும் பேச முடியாத வாறு வாயில் துணி அடைக்கப்பட்டிருக்கும் நிலையில்— என்று தனக்குள் குழப்பமடைந்து கொண்டிருந்தாள். இந்தச் சமயத்திலேதான் கற்பழிக்கும் படலம் ஆரம்பமா யிற்று. சில விநாடிகள் அவள் உள்ளமும், உடலும் பத றின. பதறிப் பலன்? பலாத்காரமாக தன் கற்பு பறிக்கப்படு வதைக் கண்டு அவள் உதிரமும், உணர்ச்சியும் கொதித் தன. கொதித்துப் பயன்?

கனக விசயன் தலையில் கல்லேற்றிக் கன்னியா குமரியில் சேரனுல் சிலை வடிக்குமளவுக்குக் கற்பின் திண்மையை உல குக்கறிவித்த கண்ணகியின் பாம்பரையைச் சேர்ந்தவள் தான் செல்லமும். அவள் தான் இப்படிச் சபதம் செய்து கொண்டாள் தனக்குள்.

அறத்துக்கு—வாழ்க்கைக்கு—இலக்கணம் வகுத்து, ஒழுக்கத்துக்கு வேலி கட்டி, வாய்மைக்கும், தாய்மைக்கும் விளக்கம் கொடுத்தானே வள்ளுவன், அந்த வள்ளுவன் வழி வந்தவர்தான் அம்பலவாணரும். இதை நினைவில் நிறுத்த வேண்டும் இங்குள்ளோர்; கோர்ட்டிலிருப்பவர்களும், வெளி யிலிருப்பவர்களும் நன்கு சிந்திக்க வேண்டும். கண்ணயிகின்

பரம்பரையில் வந்தவர்கள் காசுக்காகக் கற்பை விற்கும் நிலை மை, வள்ளுவனின் வழித்தோன்றல்கள் வஞ்சகமுள்ளவர் களாக மாறிய நிலைமை எப்படி ஏற்பட்டது? வள்ளுவனை வாயார வாழ்த்தும் பெரியவர்களே, கண்ணகியைச் சிலப்பதி காரத்திலும் சிலைவடிவிலும் மட்டும் கண்டு பெருமைப்படுவ தோடு நின்று விடாமல், மன்றம் கூட்டி மக்கள் முன்னால் அவளைப் பற்றிக் கூறி பூரிப்படையும் பூமான்களே, இதைச் சிந்தித்தீர்களா? எப்போதாவது சிந்தித்ததுண்டா? இனியா வது சிந்திப்பீர்களா?

செல்லம் சிந்தித்தாள்; தாழ்த்தப்பட்ட குடியில் பிறந்த செல்லம் சிந்தித்தாள். அனுபவ மூலமாகக் கண்டாள். அதை உலகுக்கு அறிவிக்க—மக்கள் முன்னால் விரிவாகக் கூற தன் மகளை வளர்த்தாள். ஆம், அம்பலவாணரின் பணத் தைக் கொண்டு வளர்த்தாள்...! அத்துடன் அவள் நின்று விடவில்லை. தன்னையும் வளர்த்துக் கொண்டாள். நாட்டிய ராணியாகவும், இசைராணியாகவும் தன்னை வளர்த்துக் கொண்டாள். அவள் அக்கலைகளில் தேர்ச்சி பெற்றவளானாள். அவள் ஏன் இக்கலைகளில் பயிற்சி பெற்றாள் தெரியுமா? கனவான்களின் கவனத்தைத் தன்பக்கம் இழுக்க' சீமான் களின் சிந்தையைத் தன்பக்கம் திருப்ப. அப்போது தான் கலையை ரஸிக்கிறோம் என்று சொல்லிக்கொண்டு அவளிடம் அவர்கள் வந்து போவார்கள்.

கலைகளில் தேர்ச்சி பெற்றதும் அரங்கமேறினாள். ஆடி னாள்; பாடினாள் கொஞ்சக் காலத்துக்குள், 'சீதாராணி' என்ற பெயர் நாட்டிலே, நடமாடத் துவங்கிவிட்டது. சீதா ராணியின் நாட்டியக் கச்சேரி யென்றால்—பாட்டுக் கச்சேரி யென்றால் கும்பலுக்குக் குறைவிருக்காது. ஆம் செல்லம் சீதாராணியாகி விட்டாள். அவளைப் பத்திரிகைகள் பாராட்

டின; பெரிய மனிதர்கள் பாராட்டினர்கள், அந்தஸ்து பெற்ற வர்கள் புகழ்ந்தார்கள். அவர்களின் ஆதரவும் அன்பும் சீதா ராணிக்கு நிறையக் கிடைத்தன. பணம் படைத்தவர்கள், பிரமுகர்கள், பெரிய மனிதர்கள், பட்டமும் பதவியும் உள்ள வர்கள், உயர்ந்த அந்தஸ்தில் இருப்பவர்கள் எல்லோரும் அவளிடம் வந்தார்கள். அவளுடைய கடைக்கண் வீச்சைக் கண்டு களிக்க—மயக்கும் புன்னகையை ரஸிக்க—கொள்ளை அழகுடன் காட்சி கொடுத்த அந்தக் கோமளாங்கியைக் கொஞ்சிக் குலாவ—அவளை அனுபவிக்க வந்தார்கள். வாரி வாரிக் கொடுத்தார்கள் பணத்தை! பஞ்சையாயிருந்த செல் லம்—யாரும் அற்ற அனதையாயிருந்த செல்லம்—பணக் காரியானள்! சீமாட்டியானள்; சீதாராணியென்ருல், கலை உல கில் சுடர்விடும் அழகுநட்சத்திரம் என்று போற்றிப் புகழும் அளவுக்கு உயர்ந்தாள். தன்னைத் தூக்தியடித்தவன் மாளி கையுடன், பியூக்காருடன், பெரும்புகழுடன் எந்த முறையில் வாழ்ந்தானே, அதே மாதிரி வாழும் அளவுக்கு உயர்ந்தாள்.

சீதாராணி தனக்கு மட்டும் சொந்தமாக இருக்க வேண்டுமென்று நினைத்தான், அம்பலவாணர். அவள் மற்ற வர்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாதென்று நினைத்தார். அதைச் சொல்லவும் செய்தார். செல்லம்—இல்லை—சீதாராணி சிரித்தாள்; பிறகு சீறினள். "தற்சமயம் தங்களுடன் இருக்கும் தொடர்பு அறுபடாமலிருக்க வேண்டு மானல், உங்கள் இஷ்டத்தை இனி என்னிடம் சொல்லக் கூடாது; என் விருப்பத்தை தடை செய்யவும் கூடாது!" என்ருள்; என்ன செய்வார் அம்பலவாணர். எப்படியாவது நடந்துகொள்ளட்டும்; நமக்கு மட்டும் அவள் உள்ளத்தில் சிறிது இடம் இருந்தால் போதும் என்று அதற்கு மேல் ஒன்றும் சொல்லாமல் இருந்துவிட்டார்.

சீதாராணி இந்த நிலையில் வாழ்ந்தாலும் தன் இலட்சி யத்தை மறந்துவிடவில்லை! தன் மகனைக் கண்ணும் கருத்து மாக வளர்த்தாள். பள்ளியில் படித்துவந்த அந்தப் பையனும் செல்லத்தின் எண்ணத்தைப் பிரதிபலிப்பதுபோல் திறமை யுடையவனாகவும், சிறந்த மாணவனாகவும் இருந்தான். சிறு வனாகயிருந்தாலும் அவனுடைய நுண்ணறிவைக் கண்டு ஆசி ரியர்களே ஆச்சர்யப்படுவார்கள். சீதாராணியின் வீட்டுக்கே வந்து" உங்கள் மகன் வருங்காலத்தில் பலராலும் பாராட்டக் கூடிய முறையில் சிறந்த அறிவாளியாக—செயல்வீரனாக வருவான் என்றனர், இதைக்கேட்டு செல்லம் உள்ளம் பூரித்துப் போவாள். தன்னுடைய கனவு கட்டாயம் நன வாகும் என்று நம்பிக்கை கொண்டாள். தன்மகனை எடுத்துக் கொஞ்சுவாள்: கூத்தாடுவாள். அதே சமயம் இரண்டு சொட்டுக்கண்ணீரும் உருளும் அவள் கன்னத்தில். ஆம், தன்னுடைய விபசார வாழ்க்கையை எண்ணிக்கண்ணீர் சிந்துவாள்.

நாட்கள் உருண்டு கொண்டிருந்தன.

பப்ளிக்பிராஸிக்கியூட்டாராக இருந்த சேகர் நீதிபதி யாக்கப்பட்டார். இதை அறிந்த சீதாராணிக்குச் சிரிப்பும், சீற்றமும் மாறி மாறி வந்தன. தன்னைப் போல உள்ளவர் களைச் சீரழித்த சீமான்களின் வாழ்வு உயர்ந்துகொண்டே போகிறது; பதவிகள் ஏறிக்கொண்டிருக்கின்றன. நியா யத்தை வெட்டிப் புதைத்த சேகருக்கு, நீதிபதி உத்தி யோகம். இதை எண்ண எண்ண அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. சேகருக்கும் தனக்குமிடையில் நடந்த ஒவ்வொரு சம்பவங்களையும் நினைத்துப் பார்த்துக் கொண்டாள். கடைசியாக, தன்னை உதைத்துத் தள்ளிய சம்பவத்தை—விபசாரி' என்று சொன்ன அந்த வார்த்தை

யை நினைத்தாள். அந்த வார்த்தை காதில் பயங்கரச் சத்தத்துடன் ஒலித்துக்கொண்டிருந்தது. அவள் நெஞ்சு குமுறியது.

"சேகர் உன்னைத் தவிர வேறு எவரையும், மனத்திலும் உடலினும் தீண்டாத என்னை 'விபசாரி' என்று சொன்னாயல்லவா, ஆம் உன் எண்ணப்படியே—உன்னுடைய சொல்படியே இன்று நான் விபசாரிதான். ஆம் விபசாரிதான்; விபசாரிதான். ஆனால், இதே விபசாரியிடம் உன்னை வரவழைத்து, நீ அறிந்து கொள்ளாமல், உனக்கே ஒரு பிள்ளை பெற்று, அந்தப் பெண்ணை இவள் என்னுடைய மகள்தான் என்று சொல்ல வைக்கிறேன் பார்"—என்று சபதம் செய்துகொண்டாள். இந்தச் சபதத்தை நிறைவேற்றச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தச் சந்தர்ப்பம் எளிதில் கிடைக்கக் கூடியதாக இல்லை. எனவே, அதற்கான ஒரு திட்டத்தைத் தீட்டினாள்.

அம்பலவாணர் நடத்தி வந்த ஆஸ்ரமத்திற்கு நிதி சேர்க்க ஒரு நாட்டியக்கச்சேரி வைக்க வேண்டுமென்றும், அதற்கு நீதிபதி சேகரைத் தலைமை வகிக்க அழைக்க வேண்டுமென்றும் நினைத்தாள். இந்த எண்ணத்தை அம்பலவாணருக்குச் சொன்னாள். அவரும் அதை ஆர்வமுடன் ஏற்றுக்கொண்டார்.

குறிப்பிட்ட ஒருநாளில் விமரிசையான முறையில் சீதாராணியின் நாட்டியக்கச்சேரி நடந்தது, நீதிபதி சேகரின் தலைமையிலே.

நாட்டியம் நடந்துகொண்டிருந்தது. அன்றையதினம், என்றையும்விட அதிகக் கவனம் எடுத்துத் தன்னை அலங்க

ரித்துக்கொண்டு வந்திருந்தாள் சீதாராணி. அலங்காரம் என்ருல் எப்படிப்பட்ட அலங்காரம் தெரியுமா? கண்ணையும் கருத்தையும் இழுத்துப் பறிக்கும் அலங்காரம்; கவர்ச்சியை அள்ளி வீசும் அலங்காரம்; பூரிப்புடன் எழுந்து நிற்கும் இளமையுடன் தோற்றத்தைத் தனியே எடுத்துக்காட்டி ரஸிக்க வந்தவர்களின் மனதைத் தொட்டிழுத்துத் துவள வைக்கும் அலங்காரம். இந்த அலங்காரத்துடன்தான் அரங்கத்தில் வந்து நின்று ஆடிஞள் அழகி சீதாராணி! தக தக என்று மின்னும் தங்கநிற உடல் நெளிந்து, வளைந்து நிமிர்ந்து ஒவ்வொரு உணர்ச்சி பாவங்களையும் விமர்சனம் செய்துகொண்டிருந்து. முகத்திலேகூட அந்தப் பாவங்களின் ஒளி சிதறி வெடித்தது. தனது அங்கங்களிலே மேய விட்டுக்கொண்டிருந்தாள் அந்த நாட்டியக்கலையின், உணர்ச்சி பாவங்களை. அடிக்கடி அவளுடைய அழகிய நீண்ட விழிகள் நீதிபதி சேகரைக் கவனிக்கத் தவறவில்லை, அப்போது தன் விழிகளை விழிப்பாள். விரிந்த அதரங்களில் புன்சிரிப்பை விளையாடவிடுவாள்; விழிகளைச் சுழற்றுவாள். சுழற்றும் அந்த விழிகளிலே கவர்ச்சியான பார்வையை ஏற்றிப் பிறகு வீசுவாள் நீதிபதிக்கு. அந்த விழிகளிலே விஷமம் விளையாடும். அவளுடைய அதரங்களிலே மின்னி மறைந்துகொண்டிருக்கும் புன்னகையிலே குறும்பு கூத்தாடும். ஆனல் நீதிபதிக்கு, அதன் அர்த்தம் தெரியாது! ஆனல் அந்த சிரிப்பு-அந்தப் பார்வை-அவளுடைய அங்க நெளிவுகள்-அவைகளிலே ஏறி நின்று கும்மாளம்போடும் உணர்ச்சி பாவங்கள்-அத்தனையும் அவரை ஒரு இன்ப லோகத்துக்கு அழைத்துச் சென்றன. தன்னை மறந்து அவளையே பார்த்துக்கொண்டிருந்தார் கனம் நீதிபதி அவர்கள்.

பேசுவாய்.......ஆனால்....சீதாராணி! நானும் ஒரு சீமானின் மகன் தான். லட்சக்கணக்கான ரூபாய்களுக்கு அதிபதி தான். பூங்கோதையை நான்விரும்புகிறேன். அவளுடன்....!-என்று கண்களைச் சிமிட்டினான்.

"போதும் நிறுத்து! எழுந்து போ,-கூவினாள் செல்லம்.

"ஹஹ்ஹா.......! நான் போவதா....? சீதாராணி....! பூங்கோதை......."

"அவள் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட இருப்பவள்!"

ஓ........! அப்படியா........ அந்தப் புரட்சிக் காரியத்தைச்செய்யும் அந்தச் சீமான் யாரம்மா........?" என்று கிண்டலுடன் கேட்டான் மகாலிங்கம்.

"நான்தான் மிஸ்டர் மகாலிங்கம்!"—என்று கூறிக் கொண்டே அங்கு வந்தான், அறிவழகன்!

"ஓ....! இந்தப் பிரபுவா....!"—என்று கேலியுடன் கூறி விட்டு விழுந்து விழுந்து சிரித்தான் மகாலிங்கம். "மிஸ்டர் அறிவின் அழகரே...! தாராளமாக....! தாராளமாகச் செய்து கொள்ளுங்கள்!" என்று கேலியாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

அவன் இப்படிச் சொல்லிவிட்டு வந்தாலும் மனதில் பொறாமைத் தீ கொழுந்து விட்டெரிந்தது. ஒன்றுக்கும் வழியில்லாத அந்த பிச்சாதிபதி அந்தப் பச்சைக் கிளியை அனுபவித்துக் கொண்டிருக்க இந்த லட்சாதிபதி அதைப் பார்த்துக் கொண்டிருப்பதா? கலியாணம் செய்து கொள்ளப் போகிறாராமே கல்யாணம்! நானும் பார்த்து விடுகிறேன்....!"—என்ற எண்ணங்களுடன் அவன் இருந்தான்.

பூங்கோதை அறிவழகனுக்கு மனைவியாகப் போகிறாள் என்ற செய்தி அவள் மேல் கண் வைத்துக் கொண்டிருந்த

வர்களின் வட்டாரத்தில் பரபரப்பை உண்டாக்கிற்று. இதைத்தடுக்க எண்ணினர். இதிலே முன்னணியில் நின்றான் மகாலிங்கம். இதன் காரணமாக அறிவழகனைப் பற்றிச் சில துவேஷக் கருத்துக்களை மக்களிடையே தூவினர். இக் கருத்துக்கள் முளை விட்டு வேகமாக வளர்ந்து வந்தன. இதற்கு இன்னொரு காரணமும் இருந்தது!

அறிவழகன் சீமானல்ல, ஆனால் சீர்திருத்தவாதி. அப்படிச் சொல்வதைவிட புரட்சிவாதி என்று சொல்லலாம். தீவிரமான கருத்துக்கள் உடையவன்! இன்றைய சமுதாயத்திலே இருக்கிற கோணலை—கொடுமைகளை—இழிவுகளை—அநீதிகளை—அவன் அம்பலமாக்கிக் கொண்டு வந்தான். குறிப்பாக பணமூட்டைகளாலும் பகல் வேஷம் போடும் பக்தர்களாலும் ஆண்டவன் அடியார்கள் எனப்படுபவராலும் நடக்கும் அயோக்கியத்தனங்களின் மேல் குறிவைத்துத் தன் கண்டனப் பாணங்களை எய்தான். இதனால் சீமான் உலகு அவன்மேல் சீறிப் பாய்ந்தது. ஆண்டவனைக் கும்பிட்டுக்கொண்டே கொடுமைசெய்வோரின் கூடாரம் அவனை ஒழித்துக்கட்ட முனைந்தது. எனவே, தங்கள் விஷக் கருத்துக்களை தூவுவதற்கு பூங்கோதையை மணமுடிக்க அறிவழகன் முனைந்திருப்பதைக் கருவியாக்கினர். இன்னும் ஏதேதோ சொல்லினர், செய்தனர். இதனால் எல்லாம் அறிவழகன் அசைந்துவிடவில்லை. தன் தீர்மானத்தை இன்னும் உரமாக்கினான். பூங்கோதையை மணம் செய்து கொள்வதன் மூலமாக சமூகத்துக்கு நல்லதோர் பாடம் கற்பிக்க வேண்டுமென்று எண்ணினான்.

மகாலிங்கத்துக்கு இருப்புக் கொள்ளவில்லை. எப்படியாவது பூங்கோதையை கெடுக்கவேண்டுமென்ற எண்ணம் தீவிரப்பட்டது.

ஒருநாள் இரவு செல்லத்தின் வீட்டுக்குச் சென்றான் மகாலிங்கம். செல்லத்தை உருட்டினான், மிரட்டினான், அவள் சீறினாள்.

வெகுண்டான் மகாலிங்கம். "சீமான் நான், என் அணைப்புக்கு இணங்காத பூங்கோதை, அந்தப் பிச்சைக் காரன் அறிவழகன் மார்பிலே சாய்ந்திருக்க நான் விட மாட்டேன்!"—என்று கூவிக்கொண்டே பூங்கோதையின் படுக்கை அறைக்குள் பாய்ந்தான். அவளைப் பலாத்காரமாக கசக்க முயன்றான்.

பூங்கோதை அலறினாள்; கூச்சலிட்டாள்; செல்லம் திகைப்புடன் ஓடிவந்தாள். மகாலிங்கத்தின் இரும்புப் பிடியில் அகப்பட்டுத் திணறிக் கொண்டிருந்த பூங்கோதையை அப்புறப் படுத்த முயன்றாள். முடியவில்லை, ஆத்திரம் குமுறியது. தன் பலம் கொண்ட மட்டும் மகாலிங்கத்தை நையப்புடைத்தாள். மகாலிங்கத்துக்கு கோபம் சீறிப் பாய்ந்தது. "உன்னையும், அவளையும் தீர்த்து விடுகிறேன். மகாலிங்கத்தின் மஞ்சத்துக்கு வராதவள், இந்த மானிலத்திலேயே இருக்கக் கூடாது..."—என்று ஆவேசமாகக்கூறிக் கொண்டே தன்னிடமிருந்த துப்பாக்கியால் பூங்கோதையை நோக்கிக் குறிவைத்தான். அவள் அலறிக் கொண்டே அடுத்த அறைக்குள் ஓடினாள். செல்லமும் "பூங்கோதை .!"—என்று கூவிக்கொண்டே அவள் பின்னால் தொடர்ந்தோடினாள். துப்பாக்கியின் குண்டு தன் குரலை முழுங்கிக் கொண்டு செல்லத்தின் மார்பில் பாய்ந்தது. "பூங்கோதை....!ஆனந்தா ...!"—என்று அலறிக்கொண்டே தரையில் வீழ்ந்தாள் செல்லம் சில விநாடிகளுக்குள் அவள் உயிர் பிரிந்தது.

செல்லம் பிணமானதைக் கண்டதும் ம கா லி ங் க த் துக்குத் திகில் பிடித்துக் கொண்டது! துப்பாக்கியையும் எடுத்துக் கொண்டு ஓடிவிட்டான்.

அடுத்த அறைக்கு அலறிக் கொண்டு ஓடிய பூங்கோ தை அடுத்த வீட்டிலிருக்கும் அறிவழகனிடம் ஓ டி ஞ ள். விஷயத்தைச் சொன்ஞள்; இருவரும் ஓடிவந்தனர் அங்கே, பிணமாகக் கிடந்த செல்லத்தைக் கண்டதும் அவள் மேல் விழுந்து அலறிஞள் பூங்கோதை! திகைத்து நி ன் ரு ன் அறிவழகன்.

வழக்கு நடந்தது. ஆனுல் போதிய சாட்சியமில்லை என்ற காரணத்திஞல் மகாலிங்கம் விடுதலை செ ய் ய ப் பட்டான். போதிய சாட்சியங்கள் கிடைக்காதபடியும், வழக்கைச் சிதைக்கவும் கரன்சி நோட்டுக்கள் கா ற் று வேகத்தில் வேலை செய்தன. பணத்தின் செல்வாக்குக்கு முன்ஞல் நீதி திணறியது. உயர்ந்த அந்தஸ்துக்கு முன்ஞல் நீதி கண்ணீர் வடித்தது. முடிவில் வழக்குத் த ள் ளு ப டி செய்யப்பட்டது.

செல்லம் கொலை செய்யப்பட்டது, கொலை செ ய் த மகாலிங்கம் விடுதலை செய்யப்பட்டது ஆகிய சம்பவங்கள் அறிவழகனின் மனதில் புகைச்சலைக் கிளப்பியது என்ரு லும் ஒன்றும் செய்ய முடியாத நிலையிலிருந்தான்.

ஆனந்தனுக்குக் கண்ணீரால் கடிதம் எழுதிஞள் பூங் கோதை. அவன் கதறிஞன்; துடித்தான்; ஆனுல் அவன் இங்கு வரவில்லை; தங்கையின் கடிதத்தைக் க ண் ட து ம் ஓடோடி வந்திருப்பான். ஆனுல் அவன் படிப்பு முடிய இன்னும் சில மாதங்கள் தானிருந்தன. தன் இலட்சியத்தை எட்டிப் பிடிக்க இன்னும் சிலமாதங்கள் படிக்கவேண்டும்.

எனவே, அவன் வரமுடியவில்லை. அம்மாவின் எண்ணப் படி பாரிஸ்டராகத்தான் இங்கிருந்து போவேன். அதுவரை பூங்கோதை அங்கிருக்கட்டும். நான் சென்று மகாலிங்கத் தைப் பழி வாங்குகிறேன் என்று தீர்மானம் செய்து கொண்டான்.

பூங்கோதை இங்கு தன்னந்தனியாக இருந்தாள். அவள் அப்படி இருப்பதை அறிவழகன் விரும்பவில்லை. செல்லத்தின் உயிருக்குத் தீங்கு செய்தது போல், பூங்கோ தையின் உயிருக்கும் உலைவைக்க மகாலிங்கம் முயலக்கூடும். ஆகவே நம்முடன் அவளை வைத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணினான். ஆனால் தன்னுடன் எப்படி வைத்துக் கொள்வது....? மற்றவர்கள் தவறுக—கேவலமாக--எண்ணு வார்களே? என்று நினைத்தான். செல்லம் இருக்கும் போதே பூங்கோதையைத் திருமணம் செய்யத் துடித்தான். அவளோ, ஆனந்தன் வந்த பிறகுதான் கலியாணம் என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டாள். ஆனால் இப்போது?... ஆனந்தன் வரும் வரைக்கும் தாமதிக்க முடியாது. ஒவ்வொருவிநாடியும் அவளுக்கு ஆபத்துத்தான். ஆகவே அவளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று நினைத்தான். அதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். பெற் றோர்கள் தடுத்தனர். தாசியின் மகளைத் தாரமாகக் கொள்ளா தே என்றனர். ஊராரும்,உற்றாரும் கற்பிழந்தவளின் மகளைக் கலியாணம் செய்யாதே என்றனர். இதே சாக்கைத்தான் அந்தஸ்து பெற்றவர்களும் சொல்லித் திருமணத்தைத் தடை செய்ய முயன்றனர். தலை வணங்கினானா அவன்? இல்லை, தடைகளை எதிர்த்துப் போராடினான். செல்லத்தைக்கைவிட்ட சேகரைப் போல அவன் பூங்கோதையைக் கைவிடவில்லை. பெற்றோரின் எதிர்ப்புக்கும், சினததுக்கும் தலைவணங்கித்

தளிர்க்கொடியாளைத் தவிக்க விட்டானே சேகர், அதுபோல பூங்கோதையைத் தவிக்க விடவில்லை அறிவழகன். தான் வாழ்ந்தால் போதும், தன்னை நம்பியவள் நாசமானால் நமக்கென்ன? என்று கனம் நீதிபதி சேகர் அவர்கள் நினைத்தாரே, அத்தச் சுய நலத்தை மனதில் கொண்டானா அறிவழகன்? இல்லை, அவனுக்கு மனச்சாட்சியிருந்தது. இதயத்திலே ஈரம் இருந்தது. காதலியைக் காப்பாற்ற வேண்டுமே என்ற கடமை உணர்ச்சி இருந்தது. எனவே இத் திருமணத்தை எதிர்த்து வந்த தடைகளையெல்லாம் தவிடுபொடியாக்கி விட்டுத் திருமணத்தை நடத்த நாள் குறித்து விட்டான்.

பெற்றோர் வரவில்லை. உற்றார் வரவில்லை! ஊரார் வரவில்லை; அந்தஸ்து பெற்றவர்கள் வரவில்லை கனவான்களும், பிரமுகர்களும், சீமான்களும் வரவில்லை. என்றாலும் அறிவழகன் கலங்கவில்லை. கலியாணத்தை பதிவு செய்வதன் மூலமாக நடத்திவிட்டான். சாஸ்திரம் ஒப்பாரி வைத்தது; சடங்கு அலறியது; சம்பிரதாயம் கூச்சலிட்டது; சாதி ஓலமிட்டது; பணம் பதைத்தது; அந்தஸ்து அரண்டது. கடைசியில் எல்லாம் சேர்ந்துகொண்டு விட்டோமாபார். என்று போர் தொடுக்க கிளம்பின. இப் படைக்குத் தலைவனானான் மகாலிங்கம்.

அசைந்தானா அறிவழகன்? கலங்கினானா அந்த இலட்சியவாதி! பதறினானா அந்தப் பண்பு பெற்றவன்? இல்லை; சிரித்தான்; சிரித்தான்....! சிரித்தான்.......! பிறகு சீறினான். அவன் சீற்றம் இந்தச் சமுதாயச் சிறுமைகளை நடுங்க வைத்தது. ஏற்கனவே புகைந்து கொண்டிருந்த அறிவழகனின் மனதில், பஞ்சாங்கப் படையின் போர் முழக்கம் கனலை எழுப்பிவிட்டது. அந்தக் கனல் மேனியை அழகாகவும்,

உள்ளத்தை அழுகலாகவும் வைத்துக் கொண்டிருப்போரின் வஞ்சக மடங்களைத் தாக்கிற்று. நல்லவர்களின் வேஷம் போட்டு நாசத்தனத்தைச் செய்கிறவர்களின் நரிக் குணத்தை அம்பலமாக்கினான். நீதியின் பேரால்-சட்டத்தின் பேரால்-சாஸ்திரம், சம்பிரதாயம், மதம்-இவைகளின் பேரால்; கடவுளின் பேரால்-பக்தியின் பேரால்-கலையின் பேரால்-கோயில்களின் பேரால்—அந்தஸ்தின் பேரால்—சாதிகளின் பேரால்-பதவிகளின் பேரால்-பணத்தின் பேரால் நடக்கும் அநியாயங்களை-அநீதிகளை—அக்கிரமங்களை—அசம்பாவிதங்களை-அயோக்கியத்தனங்களை—மோசடிகளை அம்பலமாக்கினான். யாருக்காக இந்த சமுதாயம் வாழுகிறது? எவருடைய கருத்துக்களைப் பிரதிபலித்துக்கொண்டிருக்கிறது இந்தச் சமுதாயம்?-என்பதையெல்லாம் இலையில் சோற்றை வைத்துக்காட்டுவதுபோல் மக்கள் முன் எடுத்துக் காட்டினான். பதை பதைத்தது பண உலகம்; சினந்தது சீமான் உலகு-சீறியது வைதீகபுரி. இதன் விளைவு அறிவழகனை ஒழித்துக் கட்டத் திட்டம் பிறந்துவிட்டது.

தன் முயற்சி யெல்லாம் தோல்வியானதைக் கண்டு சும்மாயிருக்க வில்லை மகாலிங்கம், பூங்கோதையை எப்படிக் கவரலாம் என்று சதா சிந்தித்துக் கொண்டேயிருந்தான், அந்த வண்ண மலரைக் கவர வேலி போட தடையாக இருந்த அறிவழகனை வீழ்த்த வழி யென்ன என்று சிந்தித்துக் கொண்டிருந்த சமயத்தில் பண உலகமும், வைதீக புரியும் போட்ட திட்டம் தெரிய வந்தது. உள்ளம் பூரித்தான், அவனும் அந்தத் திட்டத்தில் கலந்து கொண்டான்.

ஒருநாள் விடியற்காலை. ஒரு பாழடைந்த சாவடிக்கருகில் உள்ள ஒரு மரத்தில் கழுத்தில் சுறுக்குக் கயிற்றுடன் தொங்கிக் கொண்டிருந்தான் அறிவழகன். ஆம்!

அறிவழகன்தான் சாகடிக்கப்பட்டு பிணமாகத் தொங்கிக் கொண்டிருந்தான் மரக்கிளையிலே. முதல்நாள் இரவு, அவன் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்த சமயம் அவனுடைய எதிரிகள் அனுப்பிய காலிகள் பலர் அவனைத் தாக்கிக் கீழே வீழ்த்தி, விதையை நசுக்கி, மூச்சைத் திணறவைத்துச் சாகடித்தார்கள். பொல்லாதவர்களின் பொச்சறிப்பினால் இப்புவி வாழ்வை முடித்துக் கொண்ட அறிவழகனை பிண மாகக் கொண்டு வந்து, நகரத்தின் புறத்தேயிருக்கும் மரக் கிளையிலேதொங்கவிட்டார்கள்,கொலைசெய்யத்தூண்டப்பட்ட துரோகிகள். வைதீகம் தன் வஞ்சத்தைதீர்த்துக் கொண்டது; பணஉலகம் தன் திட்டத்தை நிறைவேற்றி விட்டது!

விடிந்த பிறகுதான் தன் கணவன் இறந்த சேதியைக் கேள்விப்பட்டாள் பூங்கோதை! அதே விநாடி மூர்ச்சித்து விட்டாள்,

அறிவழகன் தூக்குப் போட்டுக் கொண்டான், தற் கொலை செய்து கொண்டான் என்ற கதையை ஊரிலே கட்டிவிட்டார்கள் அவனைக் கொல்லத் திட்டம் தீட்டியவர்கள். எல்லோரையும் எதிர்த்துக்கொண்டு—பகைத்துக் கொண்டு- பரத்தையின் மகளைப் பாரியாளாக்கிக் கொண்டான், அவள் பத்தினிதான், பத்தினியாக இருப்பாள் என்று எண்ணிக்கொண்டு. ஆனால் அவளும் தன் தாயைப்போல கண்டவர்களுடன் கட்டிப் புரள்கிறவள்தான் என்று நேரில் பார்த்துவிட்டான். அவமானம் தாங்க முடியவில்லை. ஊராரின் முகத்திலே விழிப்பது ஒருபக்கமிருக்க, அவனுடைய தன் மானத்துக்கு முன்னாலேயே தலை குனிந்து நடக்க அவன் விரும்பவில்லை. உடனே தூக்குப் போட்டுக் கொண்டான். என்று பொருத்தமாக—மிக அழகாக கதை ஜோடித்து விட்டனர். மக்களும் இதை உண்மை யென்று நம்பினார்கள்.

அறிவழகனைக் கொன்றவர்கள்—குற்றத்தைச் செய்த அந்தக் கொடியவர்கள்—நல்லவர்களாக நாட்டிலே நடமாடிக் கொண்டிருந்தார்கள்; இப்போதும் இருக்கிறார்கள். நீதி தன் கரங்களை நீட்டிக் குற்றவாளிகளைத் தண்டனைக்கு இழுத்துவர முயலவில்லை. இந்தக் கொலையில் பெரிய, பெரிய மனிதர்கள், பிரமுகர்கள், பண வேந்தர்கள், அரசியல் செல்வாக்குப் பெற்றவர்கள்—ஆகியோர் சம்பந்தப் பட்டிருக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் சேர்ந்து தங்களுடைய செல்வாக்கென்ற கயிற்றினால் நீதியின் கரங்களைக் கட்டிவிட்டார்கள்! சட்டம் என்ன செய்யும்? அது தடிப்பான புத்தகங்களிலே வழக்கம் போல் இருந்து கொண்டது!

அறிவழகன் மாண்டுவிட்டான். இனி நமக்குக் கவலையில்லையென்று பெருமூச்சு விட்டார்கள் அவன் எதிரிகள். அமைதியாகத் தூங்கினார்கள். ஆனால் மகாலிங்கத்துக்குத் தூக்கம் இன்னும் வரவில்லை. பூங்கோதை அவன் அணைப்பிலிருந்தாலல்லவா அவனுக்குத் தூக்கம் வரும்?

அறிவழகன் இறந்த அன்றிலிருந்தே பூங்கோதை உணர்ச்சியற்றவளானாள்; செயலற்றவளானாள்; தன்னந் தனியானாள். மணமுடித்து ஆறுமாதம் கூட ஆகவில்லை. அதற்குள்ளாக அறிவழகனின் உயிரைப் பறித்து விட்டார்கள் பழிக்கஞ்சாத படுபாவிகள். அவளுக்கு எப்படியிருக்கும்? அவள் எப்படி மனம் குமுறியிருப்பாள்? எந்த நிலையிலிருந்தாள் அந்த அனாதையாகப் போன ஏந்திழை?—என்பதை நான் வர்ணிக்க விரும்பவில்லை. நீங்களே ஊகித்துணர்ந்து கொள்ளுங்கள்.

அறிவழகன் கொல்லப்பட்ட சமயத்தில் பூங்கோதை கர்ப்பிணியாக இருந்தாள். அவள் மணாளன் விட்டுப்

போன உயிருள்ள உதவியாளன் ஒருவன்தான். அவனும் வயிற்றுக்குள். வேறு எவரும் உதவியாளர்கள் அவளுக் கில்லை. அனாதையானாள்.

இளமங்கை ஒருத்தி தன்னந்தனியாக ஒரு மாளிகை வீட்டில் வாழ்கிறாளென்றால் அந்த மாளிகையிலிருக்கும் பொருட்களின் மேல் கன்னக்கோல் வைப்பவர்களின் கருத்துச் செல்லாமலிருக்குமா? ஒருநாள் இரவு, அவள் வீட்டிலிருந்த நகைகள் —இதர விலையுயர்ந்த சாமான்க ளெல்லாம் கொள்ளையிடப்பட்டன அனாதையாயிருந்த பூங்கோதை இப்போது ஏழையுமானாள்.

தான் ஏழையாய்விட்டதைக் குறித்து அவள் ஏங்க வில்லை. இன்பத்தை கொடுத்த மணாளன் போய்விட்டானே, என்றுதான் ஏங்கினாள். தன் வாழ்வில் சூறுவளியைக் காணாமல் இருக்கிறானே என் அண்ணன் ஆனந்தன். அவன் எப்போது வருவானோ என்று ஏங்கிக்கொண்டிருந்தாள்

இந்த நிலையிலிருக்கும்போதுதான் ஒருநாள் இரவு அவள் முன்னே தோன்றினான் மகாலிங்கம். புலியின் பாய்ச்சலுக்கு பலியாக இருக்கும் புள்ளிமான் போல் இருந்தது. அவளுடைய நிலை, அந்தச் சமயத்தில். மகா லிங்கத்திடமிருந்து எப்படித் தப்பிக் கொள்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. பேதை நடுங்கிப்போனாள்.

"பூங்கோதை உன் புன் சிரிப்புக்காக எத்தனை நாள் காத்திருந்தேன் தெரியுமா! புது விருந்து கிடைக்கும் நாள் என்னாளோ என்று புண்பட்டுக் கொண்டிருந்த என் மனம் இன்றுதான் ஆனந்தம் கொள்கிறது. பூங்கோதை உனக்கு யாருமில்லை. என்னைத்தவிர....தூக்குக் கயிற்றை நாடினானே

கோழை மனம் படைத்த உன் மணாளன் அறிவழகன்....! அவனை நினைத்துக் கொண்டிருப்பதில் புண்பட்ட உன் நெஞ்சுக்கு ஆறுதல் கிடைக்காது. புது வாழ்வை என்னுடன் துவங்கு; அந்த வாழ்வை துவங்கி வைக்கவே நான் வந்திருக்கிறேன்....! என்று ஏதேதோ கூறினான்,

எதையோ சிந்தித்துக் கொண்டிருந்த பூங்கோதை 'களுக்' என்று சிரித்தாள். ஆம் அம்பலவாணரிடம் செல்லம் அகப்பட்டுக் கொண்ட போது சிரித்தாளே அதுபோல, 'கலகல' எனச் சிரித்தாள். அம்பலவாணர் ஆச்சர்யமடைந்ததைப் போலத்தான் மகாலிங்கமும் ஆச்சர்யப்பட்டான் இந்தச் சிரிப்பைக் கண்டு.

"உங்கள் மனம் எப்படிப்பட்டது என்பதை இன்று தான் அறிந்தேன்.இத்தனைநாளாகியும்-இத்தனை சம்பவங்கள் நடந்த பிறகும் என்னை மறக்காமலிருக்கிறீர்களே....! இதிலிருந்து தெரிகிறது நீங்கள் என்மேல் எவ்வளவு ஆசை வைத்திருக்கிறீர்களென்று...! நீங்கள் சொல்வது சரிதான். இறந்து போனவரை எண்ணி ஏன் துயரப்பட வேண்டும்....? இனி உங்களுடன்....!" என்று கூறித் தன் இதழ் விரித்தாள்.

குளிர்ந்து போனான் மகாலிங்கம். மகிழ்ச்சி தாங்க முடியவில்லை! பூங்கோதை! என் புது நிலவே...!! என்று அவளை அணைக்கப் போனான். எட்டி நின்றாள் அவள். "என்னைத் தொடாதீர்கள், தீட்டா இருக்கிறேன்....! கவிரவும் உடம்பும் சரியில்லை ...இன்று என்னுடன்........எதுவும் வேண்டாம்! அன்பாகச் சொல்கிறேன். நீங்கள் இன்று போய் விடுங்கள்...! நாளை வாருங்கள்...!" —என்றாள்.

மகாலிங்கம் அவள் சொன்னதை நம்பிவிட்டான். அவளுடைய விருப்பத்துக்கு விரோதமாக நடக்கக்கூடாது. காயாக இருந்தது இன்று தான் கனிந்திருக்கிறது. அவசர முடன் பறித்தால்—படபடப்புடன் புசித்தால்—கனி சிதை யும்; சுவையாயும் இராது. இன்று வேண்டாம். நாளை வரலாம், கிணற்று நீரை வெள்ளமாகொண்டு போகப் போகிறது—என்று பற்பல எண்ணி, "பூங்கோதை உன் இஷ்டப்படியே நாளை வருகிறேன்!" என்று எழுந்தான்.

'வரும்போது பழமும், பூக்களும் வாங்கி வாருங்கள்!' என்றாள் பூங்கோதை, புன்னகையுடன்.

இதைக் கேட்ட மகாலிங்கம் பூரித்துப்போனான். 'ஒரு கூடை போதுமா பூங்கோதை? போதாவிட்டால் சொல்லு..! ஒரு லாரியிலேயே கொண்டு வந்து தள்ளி விடுகிறேன்!'-என்றான்.

'வேடிக்கை இருக்கட்டும்....நம்மிருவருக்கும்தானே?' என்று வேல்விழிகளால் ஒரு பார்வையை வீசினாள். அதை ரஸித்துக்கொண்டே போய்விட்டான் மகாலிங்கம்.

அவன் சென்ற பிறகு தான் பூங்கோதைக்கு மூச்சு வந்தது. தப்பிவிட்டோம்; இனி இங்கிருந்தால் ஆபத்து....! விடிந்ததும் இந்த இடத்தை விட்டுப் போய்விட வேண்டும். இந்த ஊரிலேகூட இருக்கக் கூடாது. இருந்தால் ஆபத்து தான். நிச்சயம் மகாலிங்கம் நம்மைக் கெடுத்து விடு வான்...!"—என்று நினைத்துக்கொண்டே அந்த இரவை ஓட்டினாள். மறுநாள் எல்லா விவரத்தையும் கடித மூலமாக தன் தமயன் ஆனந்தனுக்கு அறிவித்து விட்டு தன் தாயா ரின் பழைய ஊரான வட ஆற்காட்டுக் கிராமத்துக்குப் போய்விட்டாள். அண்ணன் வரும் வரைக்கும் அங்கே

காலத்தைக் கடத்தலாம் என்பது அவளது எண்ணம். தன் தாயாரின் கிராமத்துக்கு வந்ததும் ஒரு சிறு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு வாழத் துவங்கினுள். அவளிடமிருந்த சிறிதளவு பணமும் ஓரிரண்டு நகைகளும் வாழ்க்கைக்கு உதவியாயிருந்தன.

பூங்கோதை கூறியபடி பழம், பூ—இவைகளுடன் மகாலிங்கம் அவள் மாளிகைக்குச் சென்றிருப்பான். அவள் இல்லாததைக் கண்டு.... என்ன நினைத்தானே.... என்ன செய்ய வேண்டுமென்று தீர்மானித்தானே—எனக்குத் தெரியாது.

பூங்கோதை வீட்டை விட்டுக் கிளம்பி — ஒரு வாரம் சென்றிருக்கும். இங்கிலாந்தில் தன் படிப்பை முடித்துக் கொண்டு சென்னை திரும்பினுன் ஆனந்தன். வெறும் மாளிகை மட்டும் இருக்கக் கண்டு திடுக்கிட்டான். தங்கையைக் காணவில்லை. ஒன்றுமே புரியாது விழித்தான். அக்கம் பக்கத்தில் விசாரித்து சில விஷயங்களை அறிந்து கொண்டான். ஆனல் பூங்கோதை எங்கு சென்ருள் என்பதை அவனுல் அறிந்து கொள்ள முடியவில்லை. எப்படியாவது கண்டுபிடித்து விடலாம் என்ற நம்பிக்கையுடன், மேற்கொண்டு கவனிக்க வேண்டியதில் கருத்தைச் செலுத்தினுன்.

ஆனந்தன் சாதிக்க வேண்டிய விஷயங்கள் அநேகமிருந்தன, முதலாவது தன் தாயைக் கொன்றவனைக் குற்றவாளியாக்கிக் கூண்டிலேற்றுவது; இரண்டாவது தன் தங்கையின் கணவனைக் கொன்றவர்களையும், கொல்ல சதிவகுத்தவர்களையும் கண்டுபிடிப்பது. மூன்ருவது, தங்கை பூங்கோதையைக் கண்டுபிடிப்பது. நான்காவது, தாயின் இலட்சிய

மான நீதிபதி சேகரைப் பழிவாங்குவது இத்தனை வேலைகளும் அவனுக்கிருந்தன. இவைகளையெல்லாம் கவனிக்கு முன்பாக அவன் செய்த முதல்வேலை, மாளிகையை விற்று விட்டு தன் தொழிலில் இறங்கியதுதான். செல்லம் அந்த மாளிகையை ஆனந்தன் பேருக்கே உயிலெழுதி அவன் லண்டனிலிருக்கும் போதே அனுப்பிவிட்டாள். ஆகவே அந்த மாளிகையை விற்பதில் ஒருவிதக் குறுக்கீடுகளும் வரவில்லை.

சென்னையில் வேறொரு வீட்டை வாங்கிக்கொண்டு தொழிலை துவங்கிய ஆனந்தன் அப்போதுதான் பார்த்தான் தன் தந்தையின் நிலையை. அவர் அப்போது சென்னையில் செஷன்கோர்ட் ஜட்ஜாக இருந்தார். அவர் எந்தக் கோர்ட்டில் நீதிபதியாக இருந்தாரோ அதே கோர்ட்டில் அநேக வழக்குகளுக்கு ஆஜரானான் பாரிஸ்டர் ஆனந்தன். தன் தந்தை-தாயைத் துரத்தியடித்த தந்தை-துரோகம் செய்த தந்தை-நீதியின் ஸ்தானத்திலிருந்துகொண்டு நியாயம் வழங்கிக்கொண்டிருந்தார். இதைப் பார்க்கும் தோறும் அவனுக்குச் சிரிப்பும் ஆத்திரமும் மாறி மாறி வந்தது.

நீதிபதி சேகருக்கு ஆனந்தன் யாரென்பது தெரியாது. ஆனால் அவன்மேல் அபார மதிப்பும், அன்பும் வைத்திருந்தார், சில சமயங்களில் அவனைத் தன் வீட்டுக்கழைத்துச் சென்றிருக்கிறார் விருந்தினனாக! ஆனந்தனும் அவர் அழைப்பை மறுப்பது கிடையாது. அவருடைய குணங்களை-பண்பை-அறிந்துகொள்வதற்கு நல்ல சந்தர்ப்பங்களாகப் பயன்பட்டது அவரது அழைப்பு! எந்த மகனை ஒரு சோக் சுந்தாரனின் மகன்-தந்தை யார் என்பதை அறியாத ஒருவன்-என்று கூறினாரோ, அவனைத்தான் அன்புடன் அழைத்தார் வீட்டுக்கு. அவனைத்தான் பாராட்டினார்; போற்றினார். ஆனந்தன் தனக்குள் சிரித்துக்கொள்வான்.

வருஷங்கள் ஓடி மறைந்துகொண்டிருந்தன. ஆனந்த னுக்குச் செல்வாக்கு ஏறிக்கொண்டிருந்தது. அவன் தன் தொழிலில் முன்னேறிக்கொண்டிருந்தான். ஆனால் அவன் தான் செய்யவேண்டிய காரியங்களை மறந்துவிடவில்லை

ஆனந்தனின் தாயார் செல்லம், சீதாராணியாகி செல்வச் சிறப்புடன் வாழ்ந்துகொண்டிருந்த சமயம், அவள் வீட்டில் வேலம்மா என்று ஒரு வேலைக்காரி இருந் தாள். அவள் ஆனந்தனிடமும், பூங்கோதையிடமும் பேரன்புகொண்டவள். செல்லத்துக்கு வலது கைபோல் இருந்து வந்தாள். செல்லம் கொலையுண்டபிறகு பூங்கோதை யுடன் அவள் இருந்தாள். அவளுடைய எண்ணமும் செல் லத்தைக் கொலை செய்த மகாலிங்கத்தை எப்படியாவது பழிவாங்க வேண்டுமென்பதுதான். அந்த எண்ணத்தை நிறைவேற்ற ஆனந்தனின் வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள்.

பூங்கோதை வீட்டைவிட்டு வெளியேறும்போது வேலம்மா ஊரில் இல்லை. தன் மகளுடைய பிரசவத்துக்காக அவளுடைய ஊருக்குச் சென்றிருந்தாள். அவள் திரும்பி வந்து பார்க்கும்போது, பூங்கோதை இல்லை; திடுக்கிட்டாள்; திகைத்தாள். மகாலிங்கம்தான் அவளையும் கொன்றுவிட் டானோ, வேறு எங்கேயாவது கடத்திக்கொண்டு போய் விட்டானோ.......என்றெல்லாம் நினைத்தாள். அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. என்ன செய்வாள்? அவளுக்கு இந்த மாதிரி விஷயங்களில் எப்படி வேலை செய்யவேண்டு மென்று தெரியாது. ஏழை; எழுதப் படிக்கத் தெரியாது. திகைத்துக்கொண்டிருந்தாள். ஆனந்தன் ஊர் வந்ததும் அவனைக் கட்டிப்பிடித்துக்கொண்டு அழுதாள்; கதறினாள்; நடந்ததையெல்லாம் கூறினாள்.

அந்த வேலம்மா என்ற வேலைக்காரியைத் தான் தன்னுடைய முக்கிய ஆளாகக் கொண்டான் ஆனந்தன். மகாலிங்கத்தின் வீட்டில் வேலைக்காரியாக இருந்து அவனைப் பற்றிய விஷயங்களை அறியும்படி சொன்னான். அவளும் அதற்கிணங்கி அப்படியே செய்தாள்.

சென்னையை விட்டு ஓடிப்போய் கிராமத்தில் வசித்து வந்த பூங்கோதைக்கு ஒரு ஆண் மகவு பிறந்தது. அது வளர்ந்து கொண்டிருந்தது. தன் அண்ணன் வருவான் என்று மூன்று ஆண்டுகளாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த பூங்கோதைக்கு ஓரே ஏமாற்றமாக இருந்தது. ஒருவேளை பட்டணத்துக்கு வந்திருப்பாரோ...நாம் போய்ப் பார்த்தால் என்ன—என்ற எண்ணங்கள் உதயமாயின. உடனே தன் மகனையும் எடுத்துக் கொண்டு சென்னைக்கு வந்தாள். தன்னுடைய மாளிகைக்குச் சென்றாள். அங்கே ஒரு மார்வாரிக் குடும்பம் குடியிருந்ததைக் கண்டதும் அவளுக்கு ஆச்சர்யமாக இருந்தது. அவர்களிடம் விசாரித்ததில் யாரோ ஒரு செட்டியார் அந்த மாளிகையை விலைக்கு வாங்கியிருப்பதாகவும், மார்வாரிக் குடும்பம் அதிலே வாடகைக்கு இருப்பதாகவும் தெரிய வந்தது. நமக்குச் சொந்தமான வீட்டை வேறு யார் விற்றிருக்கக் கூடும் என்று யோசித்தாள். அந்தவீடு அண்ணன்பேருக்கு இருந்தது அவளுக்குத் தெரியும். ஆகவே அண்ணன் வந்திருக்க வேண்டும். அவர் தான் இந்த வீட்டைச் செட்டியாருக்கு விற்றிருக்க வேண்டும். ஆகவே அண்ணன் மெட்ராஸிலேயே இருக்க வேண்டும். ஆம் அவர் இங்குதான் இருப்பார். அதை விசாரித்துக் கண்டு பிடிக்க வேண்டும். என்று நினைத்தவளாய் பாரிஸ்டர் ஆனந்தனிருக்கும்வீட்டை விசாரித்தாள் சரியான பதில் அவளுக்குக் கிடைக்க வில்லை. கோர்ட்

டுக்குப்போய் அங்குள்ளவர்களை விசாரித்தால் தெரியவரும் என்று, அங்குள்ள இரண்டு மூன்று நீதிமன்றங்களுக்குச் சென்று விசாரித்திருக்கிருள். ஆனந்தன் இறந்து விட்டதாகப் பதில் கிடைத்தது. ஆம், சமீபத்தில் காலஞ் சென்ற பிரபல பாரிஸ்டரான ஆனந்தராஜ் அவர்களைத்தான் குறிப்பிட்டிருக்கிருர்கள்.

அண்ணன் இறந்துவிட்டான் என்று கேள்விப் பட்டதும் அவளுடைய கடைசி நம்பிக்கையும் அறுந்து விட்டது. வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் இல்லாமல் என்ன செய்வதென்றறியாது விழித்தாள். கையிலிருந்த காசும் செலவழிந்து விட்டது. இந்நிலையில் சென்னைநகரிலே அலைந்து கொண்டிருந்தாள். அச்சமயம் அவள் பட்ட கஷ்டமும் துன்பமும் இவ்வளவுதான் என்று அளவிட்டுக் கூற முடியாது. சுருக்கமாகச் சொன்னல், செல்லம், சென்னைவீதிகளில் எப்படித் திரிந்தாளோ, எந்த நிலையிலிருந்தாளோ, அதே நிலையிலிருந்தாள் பூங்கோதை!

ஒருநாள் ஒரு பெரிய மாளிகையின் முன்னல் நின்று கொண்டு பிச்சை கேட்டாள். அதுசமயம் உள்ளேயிருந்து வந்தான் மகாலிங்கம். ஆம். அந்த வீடு மகாலிங்கத்தின் மாளிகைதான். அவனைக் கண்டதும் பூங்கோதை திடுக்கிட்டாள். மகாலிங்கமும் திடுக்கிட்டான், பிறகு புன்னகை செய்தான் அவளைப் பார்த்து. அந்தப் புன்சிரிப்பிலே, 'அகப்பட்டுக்கொண்டாயா...!' என்ற அர்த்தம் தெறித்தது. அப்புறம் கூறவும் வேண்டுமா...? பூங்கோதையும், அவளுடைய பாலகனும் சிறைப்படுத்தப்பட்டார்கள் மகாலிங்கத்தால்.

அன்றிரவு தனது அறையில் பூங்கோதையை வைத்துக் கொண்டு அவளை மிரட்டினன். 'முன்பு ஏமாற்றிவிட்டு

ஓடியதைப்போல இனி ஓட முடியாது...! இன்று இரண்டில் ஒன்று!'-என்று கர்ஜித்துக்கொண்டிருந்தான். இதே சமயம் அந்தப்பக்கம் வந்தாள் வேலம்மா. உள்ளே சத்தம் கேட்டதும் சந்தடிசெய்யாமல் நின்றுகொண்டு உள்ளே நடப்பதைக் கவனித்தாள்.

'புலியின் குகைக்கு முன்னல் வெள்ளாடு நிற்பதைப் போல, உன் வீட்டுக்கு முன்னுலே நின்றேனே....இதற்குத்தானு என் கிராமத்தைவிட்டு வந்தேன்? அண்ணன் இறந்துவிட்டான் என்று அறிந்த உடனே நானும் செத்திருக்கக் கூடாதா? பிச்சை எடுத்துக்கொண்டு அலைந்தேனே உனக்கு இரையாவதற்கா......!' — இப்படியாக தான் வெளியேறியதிலிருந்து, அன்று நடந்ததுவரை ஒவ்வொன்றையும் சொல்லி அழுது புலம்பிக்கொண்டிருந்தாள் பூங்கோதை!

இதைக் கேட்டதும் வேலம்மாளுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அந்தக் குரல் பூங்கோதையுடையதுபோலிருந்தது. ஜன்னல் திரையை நீக்கிக்கொண்டு உள்ளே பார்த்தாள். உள்ளே, பூங்கோதை மறுபக்கம் திரும்பிக்கொண்டிருந்ததால் அவள் முகத்தைக் காண முடியவில்லை.

இதற்குள் மகாலிங்கம் ஏதேதோ சொல்லிக்கொண்டிருந்தான். கடைசியில் 'பூங்கோதை.......இன்று என் விருப்பத்துக்கு இணங்கத்தான் வேண்டும். இல்லே....!' என்று அவளை மிரட்டினுன். அப்போதுதான், உள்ளே இருப்பவள் பூங்கோதை என்று அறிந்தாள் வேலம்மா. அவளுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. கதவு தாளிடப்பட்டிருந்தது. ஜன்னலில் எட்டிப் பார்த்தாள்.

'என் மகன்—என் செல்வத்தை என்னிடமிருந்து பிரித்துவிட்டு, என்னைக் கெடுக்கவா வந்து நிற்கிறே என் உயிர் போனாலும் போகுமே தவிர, உன் இஷ்டத்துக்கு மட்டும் இணங்க மாட்டேன்....!'

அப்போதுதான் கீழே தான் பார்த்த குழந்தை பூங்கோதையின் மகன் என்று தெரிந்தது வேலம்மாளுக்கு. அவள் மாடிக்கு வரும்போது ஒரு அறையில் அக்குழந்தை கட்டிலில் துயின்றுகொண்டிருந்தது. அதைத் தூக்கிக் கொண்டு ஓடலாமா என்று யோசித்தாள். ஆனால், உள்ளே பூங்கோதை அபாயத்திலிருப்பதைப் பார்த்து அங்கிருந்து நகர அவளால் முடியவில்லை. பூங்கோதையைக் காப்பாற்ற என்ன வழி என்று சிந்தித்தாள். கூச்சல்போட்டு யாரையும் அழைக்கலாமென்றால் அதற்கும் வழியில்லை. அந்த வீட்டில் ஒரு கிழவியைத் தவிர வேறு யாருமில்லை. எனவே ஒன்றும் புரியாது நடப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

இதற்குள் மகாலிங்கம் பூங்கோதையை பலாத்காரம் படுத்தத்துவங்கினன். இருவருக்கும் போராட்டம் நடக்கத் துவங்கியது. அதற்குமேல் அவளால் அங்கு நிற்க முடியவில்லை. தெருவுக்கு ஓடி யாரையும் அழைத்து வரலாமென்ற நோக்கத்துடன் கீழே ஓடினாள். இந்தச் சமயத்தில் மாடியிலிருந்து யாரோ கீழே விழுந்த சத்தம் கேட்டது! பூங்கோதைதானே....?-என்று மறுபடியும் மாடிக்கு ஓடினாள்.

அறைக்குள்ளே பூங்கோதை மட்டும் நின்றுகொண்டு "கொலை....கொலை...!" என்று வெறி பிடித்தவள் போல் கூவிக் கொண்டிருந்தாள். வேலம்மாவுக்குப் பயத்தினால் உடம்பெல்லாம் நடுக்க மெடுக்கத் துவங்கியது. உள்ளத்தில்

திகில் ஏறிநிற்க, "பூங்கோதை, கதவைத்திற...! நான்தான் வேலம்மா...!" என்று கத்திக் கொண்டே கதவைத் தட்டினாள் பூங்கோதை அதைக் காதில் வாங்காதவளாய் மீண்டும் "கொலை...! கொலை....!"—என்று கூவிக்கொண்டிருந்தாள். வேலம்மாளுக்குப் பயத்தினால் என்ன செய்வதென்றே தெரியவில்லை. மனதில் திகிலும், குழப்பமும் சூழ, கீழே ஓடிச் சென்று அறையில் நித்திரை செய்து கொண்டிருந்த பூங்கோதையின் மகனைத் தூக்கிக்கொண்டு ஆனந்தனின் வீட்டுக்கு ஓடி வந்தாள்.

கையில் ஒரு பாலகனுடன் பரபரப்பும் திகிலும் நிறைந்த முகத்துடன் தன் எதிரே நின்ற வேலம்மாவைக் கண்டதும் ஆனந்தனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. அவனுடைய அதிர்ச்சி ஓய்வதற்குள்ளாகவே பதை பதைப்புடன் நடந்தவைகளைக் கூறினாள் வேலம்மா. ஆனந்தன் மேலும் அதிர்ச்சியும், சந்தோஷமும், துக்கமும்—இப்படியான பல் வேறுபட்ட உணர்ச்சிகளுக்கிடையில் சுழன்றான். ஒரு மணி நேரத்துக்குப் பிறகுதான் அவன் நிதானத்துக்கு வந்தான். என்ன செய்வதென்று யோசித்தான். ஒரு தீர்மானத்துக்கு வந்தவன் போல் தங்கையைக் காண உடனே புறப்படாமல் இருந்து விட்டான்.

மறு நாள் காலை....

மகாலிங்கம் மாடியிலிருந்து தள்ளப்பட்டு மண்டை நொறுங்கி மாண்டான் என்றும், பூங்கோதை கொலைக் குற்றத்திற்காகக் கைது செய்யப் பட்டிருப்பதாகவும் அறிந்தான். அதற்காக அவன் கவலைப்படவில்லை.

ரிமாண்டிலிருந்த தங்கையைப் போய்ப் பார்த்தான். அவளுடைய மூளை அப்போது குழப்ப மடைந்திருந்தது.

சிந்தனை நல்ல முறையில் செயல்படவில்லை. அவள் ஆனந்தனை அடையாளங்கண்டுகொள்ள முடியவில்லை. ஒன்றும் பேசவுமில்லை. ஆனந்தனும் தன்னை யாரென்று காட்டிக் கொள்ளவில்லை! ஆம், அவன் தன்னைத் தமையனென்று காட்டிக் கொள்ளாததற்குக் காரணமிருந்தது.

வேலம்மாள் சொன்ன செய்தியைக் கேட்டவுடன் தன் தாயின் இலட்சிய வாசகங்கள் அவன் காதில் ஒலிக்கத் துவங்கிவிட்டன.

விபசாரி என்று கூறினாய்....! இப்போது விபசாரியாய் விட்டேன். இதே விபசாரி தூய்மையானவளாக இருக்கும் போதுதானே அப்படிக் கூறினாய், காலால் உதைத்தாய்? இதே விபசாரி உனக்கொரு மகள் பெற்று, அவளை வளர்த்து உனக்கு முன்னாலேயே உன் மகள்தான் என்று சொல்ல வைக்கிறேன் என்று ஆனந்தனின் தாய் சபதமிட்டாளல்லவா, அந்தச் சந்தர்ப்பத்தை நிறைவேற்ற அருமையான சந்தர்ப்பம் இது. அதுமட்டுமல்ல, தன் தந்தையைத் தாயின் எண்ணப்படிப் பழிவாங்கவும் தக்கதருணம் இது. இப்போது செஷன் கோர்ட் நீதிபதியாக இருக்கிறார் என் தந்தை. அந்த செஷன்ஸில்—அவருக்கு முன்னாலேயே இந்த வழக்கு விசாரணைக்கு வரும். அது சமயம் நமது இலட்சியத்தை நிறைவேற்றிவிட வேண்டியதுதான். அதுவரைக்கும் நம்மை யார் என்று எவரும் அறியக்கூடாது. நமக்கும், இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட பெண்ணுக்கும் எவ்விதத்தொடர்புமில்லையென்ற முறையிலே நடந்து கொள்ள வேண்டும். பூங்கோதைக்குக்கூட நம்மை யாரென்று தெரியப்படுத்தக் கூடாதென்று தீர்மானித்தான். எனவேதான் தங்கையைப் போய்க் கண்டான். பிறகு வந்துவிட்டான் தன்னை யாரென்று காட்டிக் கொள்ளாமல்.

பூங்கோதை கைதியாகிக் கீழ் கோர்ட்டில் விசாரிக்கப் பட்டு இப்போது நடக்கும் செஷன்ஸ் விசாரணைக்குக் கொண்டு வரப்பட்டாள், தமையன் இறந்து விட்டான் தன் சிந்தையில் அரசோச்சும், கணவன் இறந்து விட்டான்; நான் இனிமேல் எதற்காக வாழவேண்டும்? வாழ அவசியமில்லை!" என்று எண்ணி மகாலிங்கத்தை நானே கொன்றேன் என்று கூறிக் கொண்டு, அதோ கூண்டிலே நிற்கிருள் பூங்கோதை! ஆம் அவள் தான் பூங்கோதை! ஒரு நீதிபதியின் மகளுடைய வரலாறு கடைசியில் கொலைக் குற்றத்துடன் வந்து நிற் கிறது.......!"

பாரிஸ்டர் பரமானந்தன் இவ்வளவையும் கூறிவிட்டு வியர்த்திருந்ததனது முகத்தைக்கைத்துண்டால் துடைத்துக் கொண்டார். அதுவரை அமைதியாக இருந்து எல்லா வற்றையும் கேட்டுக்கொண்டிருந்த எல்லோரும் கூண்டிலே பூங்கோதையையும், பாரிஸ்டர் பரமானந்தனையும் மாறி மாறிப் பார்த்தனர். எல்லோருடைய விழிகளிலும் வியப்பு விரிந்திருந்தது.

பாரிஸ்டர் பரமானந்தனின் சொற்களிலே ஓடிவந்த ஒரு நீதிபதியின் வரலாற்றை-அவனுடைய காதலியின் வரலாற்றை-அந்தக் காதலியின் மக்களுடைய வரலாற்றை— உள்ளக் குமுறலுடன் மிகமிகக் கவனமுடன் கேட்டுக் கொண்டே வந்த நான், கூண்டிலே நின்ற அந்தப் பெண்ணைக் கூர்ந்து கவனித்தேன். என் அறிவும் உணர்ச்சியும் சிதைந் தன. உள்ளம் குன்றிக் கூனியது. பலவிதமான உணர்ச்சிப் பொறிக்குள் அகப்பட்டுத் திணறிக்கொண்டிருந்த நான் பாரிஸ்டர் பரமானந்தனைப் பார்த்தேன். அதே விநாடி அவர் தன் பேச்சை மீண்டும் துவங்கினர். கோர்ட்டில் உலவிய 'குசுமசு' என்ற ஜனங்களின் ஓசை அடங்கி அமைதி நிலவத் துவங்கியது.

'இப்போது, உங்களுடையகேள்வியெல்லாம் ஆனந்தன் எங்கே என்பதுதான்...! கனம் கோர்ட்டாரவர்களுக்கும் இங்கு கூடியுள்ள மக்களுக்கும் ஆனந்தன் எங்கே? பாரிஸ்டர் ஆனந்தன் எங்கே....? என்ற கேள்வி உள்ளத்தில் எழுந்து நிற்கும். என்னையே பார்த்துக்கொண்டிருக்கும் உங்கள் விழிகளிலே அந்த வினுதான் ஏறி நிற்கிறது!

அந்த ஆனந்தன் தான் இதோ பாரிஸ்டர் பரமானந்தனுகப் பேசிக் கொண்டிருக்கிறுன். ஆம் என்னைத் தான் குறிப்பிடுகிறேன். பாரிஸ்டர் சேகராக இருந்து, பிறகு பப்ளிக் பிராஸிக்கியூட்டராகஇருந்து இப்போது நீதிபதியாக இருக்கிருரே அதே நீதிபதியின் மகன்—செல்லம்மாளாக இருந்து சீதாராணியாக மாறினுளே, அவளுடைய மகன்-மகாலிங்கத்தை மாடியிலிருந்து பிடித்துத் தள்ளிக் கொன்றுவிட்டாள் என்று குற்றஞ்சாட்டப்பட்டுக் கூண்டிலே நிற்கிருளே பூங்கோதை, அவளுடைய அண்ணன்-நான் தான். என்னைத் தான் இதுவரை பாரிஸ்டர் ஆனந்தன் என்று கூறிக்கொண்டு வந்தேன். என்னுடைய முழுப் பெயர் பரமானந்தன். இந்தப் பரமானந்தன் தான் தன் இலட்சியத்தை-தன் தாயின் சபதத்தை நிறைவேற்ற இந்த நீதிமன்றத்துக்கு வந்திருக்கிறுன். ஆம் நான்தான் வந்திருக்கிறேன். என் வாழ்க்கையின் வெற்றி விழாவைக் கொண்டாட வந்திருக்கிறேன். எவனை சோக்சுந்தரனின் மகன் என்று கூறினுரோ கனம் நீதிபதி, அந்தப் பையன்தான் பாரிஸ்டர் பரமானந்தனுகி பலருக்கு முன்னுல்-நீதிமன்றத்துக்கு முன்னுல்-தன் தந்தையின் வரலாற்றை-அவருடைய துரோகத்தை அம்பலமாக்குவதன் மூலமாகப் பழிவாங்க வந்திருக்கிறுன். ஆம், நான்

பழிவாங்கவந்திருக்கிறேன்; பழிவாங்கிக்கொண்டிருக்கிறேன். ஆம் அதே நீதிபதி குணசேகரம் பிள்ளையாக வீற்றிருக்கிறாரே, அவர்தான்-தன் மகளை யாரென்று அறியாமல் அவளைக் கூண்டிலே நிற்க வைத்து விசாரித்துக்கொண்டிருக்கிறாரே அவர்தான்-கூண்டிலே நிற்பவள் தன் மகளல்ல-யாரோ ஒரு பெண் எனது மைத்துனன் மகாலிங்கத்தை மாடியிலிருந்து தள்ளிக் கொன்றுவிட்டாள் அவளுக்குத் தண்டனை வழங்கவேண்டுமென்று தீர்ப்பெழுத உட்கார்ந்திருக்கிறாரே அவர்தான், நான் இதுவரை கூறிவந்த விபசாரி செல்லத்தின் காதலர் சேகர் அவர்கள், இந்த நீதிபதி குணசேகரம் பிள்ளைதான் அந்த அபலையை அடித்துத் துரத்தி, இல்லை, உதைத்து உருள வைத்து உவகைகொண்ட சீமான் வீற்றிருக்கிறார் நீதிபதியாக! அறங்கூறும் மன்றத்துக்குத் தலைவராக!

தன் தாயின் சபதத்தை நிறைவேற்றிக்கொண்டிருக்கிறான், தந்தையைப் பழிவாங்கிக்கொண்டிருக்கிறான், தன்னால் யாரோ ஒரு சோக்சுந்தரனின் மகனென்று கூறப்பட்டவன் என்பதைத் தெரிந்துகொண்ட கனம் நீதிபதி அவர்கள். எனவேதான் அதோ தலை கவிழ்ந்தபடி ஆசனத்தில் அமர்ந்திருக்கிறார்... இன்னும் சிறிது நேரத்தில் எழுந்து சென்றுவிடுவார். தீர்ப்பெழுதாமலே எழுந்து சென்று விடுவார். அவரால் எப்படித் தீர்ப்பெழுத முடியும்? நான்கேட்கிறேன்; நியாயத்தின் பேரால்-நீதியின் பேரால்-இங்கு கூடியிருக்கும் மக்களைக் கேட்கிறேன். இந்தக் குணசேகரம் பிள்ளைத் தீர்ப்பெழுத-நீதி வழங்க-தகுதி வாய்ந்தவரா? இந்த அறங்கூறும் மன்றத்துக்குத் தலைவராக இருக்க அருகதையுள்ளவரா?

நீதிமன்றம் புனிதமே உருவான இடம். அங்கே அக்கிரமக்காரர்களுக்கு-துரோகம்செய்தவர்களுக்கு-வாக்குறுதியை மறந்தவர்களுக்கு-ஒழுக்கத்தை உதறித் தள்ளியவர்களுக்கு-காதலிமார்களை விபசாரிகளாக்கியவர்களுக்கு இடம் இருக்கிறதா? புனிதமான ஆசனத்தில் இருந்து அறங்கூற தகுதியிருக்கிறதா? மக்களைக் கேட்கிறேன்; நெஞ்சிலே நேர்மையை வைத்திருப்பவர்களைக் கேட்கிறேன். இதோ இருக்கிறாரே குணசேகரம் பிள்ளை, இவர் நீதிபதியாக இருக்க அருகதையுள்ளவரா?

சட்டத்தைப் படித்துவிட்டு, பணத்தின் செல்வாக்கினால் மட்டும் நீதிபதியாகிவிட்டால், அந்த நீதிபதிகளைக்கொண்ட நீதிமன்றங்களால் நீதியை நிலைநிறுத்த முடியாது. நீதியின் இலட்சணங்களைச் சரிவரத் தெரியாதவர்களை மனிதத் தன்மைகளின் உயர்ந்த பண்புகளை அறியாதவர்களை, சமுதாய வாழ்க்கையின் உண்மையான தத்துவத்தை உணராதவர்களை, சட்டம் படித்தவர்-பணக்காரர்-உயர்ந்த அந்தஸ்தில் உள்ளவர் என்ற காரணங்களுக்காக நீதிபதியாக்கினால், நீதி கெட்டுத் தலை குனியும். நீதிபதி குணசேகரம் பிள்ளைகளை தனது பீடத்திலமர்த்தி அசுத்தப்படுவதைக்கண்டு கண்ணீர் வடிக்கும். ஆம், இந்த நீதிமன்றம் இப்போது அசுத்தப்பட்டிருக்கிறது, குணசேகரம் பிள்ளையை நீதிபதியாகக்கொண்டதால்.

என் இலட்சியம் நிறைவேறிவிட்டது; என் அன்னையின் இலட்சியம் நிறைவேறிவிட்டது! அதற்காக மகிழ்ச்சியடைகிறேன்; பூரிப்படைகிறேன்; பெருமைப்படுகிறேன். நான் நீதிபதி குணசேகரம் பிள்ளையின் மகன் என்பதற்

காகப் பெருமைபடுவதைவிட, விபசாரி சீதாராணியின் மகன் என்பதில் பெருமைப்படுகிறேன்! ஆம், என் தாயாரை, ஒழுக்கத்தின் பெட்டகத்தை சருக்கி விழுந்த சதுராட்டக்காரியாக்கியது யார்? யார்? அதோ கனமாக-நீதிபதியாக-இருக்கிறாரே, அந்தக் குணசேகரம் பிள்ளை தானே; அவருடைய மகனென்று சொல்லிக்கொள்வதில் மட்டும் பெருமை வந்துவிடுமோ, நடன மாதாக இருந்தாள் என் அன்னை....செல்லம்தான் என்று அவருக்குத் தெரியாது. ஆனால், அழகுவாய்ந்த ஒரு மங்கை என்றுதான் எண்ணியிருந்தார். அந்த நடனமாதை நள்ளிரவில், தன் மனைவியை விட்டு-வீட்டைவிட்டு-சென்றவர்தானே, அவர்மட்டும் எப்படி ஒழுக்கமுற்றவராக இருக்க முடியும்? நீதிபதியாக இருப்பதால்-கனமாக இருப்பதால்-பணக்காரராக இருப்பதால்-உயர்ந்த அந்தஸ்தும், புகழும், மதிப்பும் உள்ளவராக இருப்பதால், அவருடைய ஒழுக்கவீனங்கள்-துரோகச் செயல்கள்-எல்லாம் மறைந்துவிடுமோ?-

இவரைப்போல எத்தனையோ குணசேகரர்கள் இருக்கிறார்கள் நாட்டிலே, ஆனால் அவர்கள் நெஞ்சில் இருத்தவேண்டியது ஒன்று! உங்களுடைய அழுக்குப் பிடித்த நடத்தைகளை-அழுகி நாறிப்போன சம்பவங்களை-அம்பலப்படுத்த-பெரிய மனுஷத்தனங்களை மக்கள் முன் காட்ட என்னைப்போல் எத்தனையோ பரமானந்தர்கள்—இறந்துபோன அறிவழகனைப்போல் எத்தனையோ அறிவழகன்கள் தோன்றிக் கொண்டிருக்கிறார்கள்; இனியும் தோன்று வார்கள். எனவே, நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

என் தங்கைக்காக வாதாடும் இந்த வழக்குத்தான் என் கடைசி வழக்கு என் தாயாரின் இலட்சியத்திற்காக இதுவரை பாரிஸ்டராக இருந்தேன். பூங்கோதையின் வழக்கு முடிந்ததும் நான் மாறி அவளுடைய கணவன்—அறிவழகன் எதற்காக இறந்தானே, அதற்காக உழைக்கப் போகிறேன்.

மகாலிங்கம் இறந்திருக்காவிட்டால், நானே அவனைக் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தியிருப்பேன். என் தாயைக் கொன்றவனுக்குத் தக்க தண்டனை வழங்க வைத்திருப்பேன். இப்போது, அந்த வேலை என்னை விட்டு அகன்று விட்டது. அடுத்ததாக எஞ்சி நிற்பது பூங்கோதைக்காக வாதாடுவது.

என் தாயைக் கொலை செய்த மகாலிங்கத்தைத் தண்டிக்க நீதி முன்வரவில்லை; பூங்கோதையின் கணவனைக் கொன்றவர்களைத் தண்டிக்க சட்டம் வரவில்லை. அந்த நீதி—அந்தச் சட்டம்— இதோ கூண்டிலே நிற்கும் என் தங்கையைத் தண்டிக்கத் துடி துடித்துக் கொண்டிருக்கிறது. ஏன்? அவள் ஏழை என்பதால்; யாரும் அற்ற அனாதை என்று நினைத்திருந்ததால். ஆனல் பூங்கோதை குற்ற மற்றவள் என்பதை நிரூபித்து அவளை விடுதலையாக்கப் போகிறேன். இதோ நீதிபதியாக இருக்கிறாரே குணசேகரம்பிள்ளை அவருக்கு முன்னலல்ல; என் தங்கைக்கு நீதி வழங்க இவர் தகுதி வாய்ந்தவரல்ல. இந்த வழக்கில் தீர்ப் பெழுத மாட்டார் என்பது எனக்குத் தெரியும். அப்படித் தீர்ப்பெழுதினலும் அத்தீர்ப்பை எதிர்த்து வாதாடுவேன் இந்த இடத்தில் இன்னென்றையும்

சொல்ல வேண்டியிருக்கிறது. ஜூரிமார்களும், கோர்ட்டி லிருப்பவர்களும் இதைக் கவனமுடன் மனதிலிருத்திக் கொள்ளவேண்டும். நான் இங்கே பூங்கோதைக்காக வாதாடுவதால் அவளை விடுவிக்க முடிகிறது! நான் இல்லை யென்று வைத்துக்கொள்வோம். அப்போது என்ன நடக் கும். அநியாயமாக ஒரு நிரபராதி தண்டிக்கப்படுவாள். ஆம். இப்படித்தான் எத்தனையோ நிரபராதிகள் தண்டிக் கப்பட்டிருக்கிருர்கள்; தண்டிக்கப்பட்டுக்கொண்டிருக்கி ருர்கள். நான் நீதியின்மேல் குற்றஞ்சாட்டவில்லை; சட்டத் தின் மேல் குறை கூறவில்லை. நீதி கையாளப்படும்விதம்-சட்டம் கையாளப்படும் முறை—இவற்றின்மேல்தான் குறை கூறுகிறேன். இன்றையச் சட்டம், முழுநிறை வுள்ளதல்ல. அதில் பல குறைகளிருக்கின்றன. இன்றையச் சட்டம் எப்படியிருக்கிறதோ, அப்படித்தான் அவற்றை அமைக்க முடியும் இன்றைய சமுதாயத்தால். எனவே சட்டத்தைக் குறைகூறிப் பயனில்லை. சட்டத்தை யார் ஆக்கினுர்களோ-அவர்களைப்பற்றிச் சிந்திக்க வேண்டும், நாம்.இன்றிருக்கும் சட்டத்தின் உதவிகூட எத்தனையோ பேர்களுக்குக் கிடைக்க முடியாதிருக்கிறது. இன்றையச் சட்டம்-அந்தச் சட்டத்தைப் படித்து உணர்ந்திருக்கும் பாரிஸ்டரின்-வக்கீலின்-வாதம் ஏழைகளுக்குக் கிடைக்க முடியாத நிலையிலிருக்கின்றன. எனவே அவர்கள் அகப் பட்டுக்கொள்கிருர்கள்; தண்டிக்கப்படுகிருர்கள். இந்த இடத்தில் நீதி சரிந்து விடுகிறது. ஆனல் பணம் படைத் தோருக்கு—செல்வாக்குள்ள சீமான்களுக்கு மேற் கூறியவை எளிதில் கிடைத்துவிடுகின்றன. எனவே குற்ற

வாளிகளாயிருந்தாலும் நீதியின் தாக்குதல்களிலிருந்து தப்பித்துக்கொள்கிறார்கள். இதற்குச் சான்றாக மாண்டு போன மகாலிங்கத்தையும், அறிவழகனைக் கொன்றவர் களையும் எடுத்துக்கொள்ளலாம். இவைமட்டுமல்ல-இன்னும் எத்தனையோ எடுத்துக் காட்டுக்களையும் தரமுடியும்!

கடைசியாக, நான் இந்த நீதிமன்றத்தில் பிரயோகிக் கக்கூடாத சில கடுமையான வார்த்தைகளைக் கனம் நீதிபதி யவர்களின் மேல் பிரயோகித்து விட்டேன். நீதிபதியாக இருப்பவர் என் தகப்பனாரான சேகர்தான் என்றாலும், அவர் ஒரு நீதி மன்றத்தின் தலைவராக இருக்கிறார் இப் போது. எனவே இந்த நீதி மன்றத்துக்கு நான் மதிப் பளிக்க வேண்டும், மரியாதை செலுத்த வேண்டும், கண் ணியம் காட்ட வேண்டும். எனவேதான், நான் உபயோ கித்த சில கடுமையான கோர்ட்சம்பிரதாயத்துக்கு அப்பாற் பட்ட வார்த்தைகளை நான் இனியும் கூற மாட்டேன் என்று உறுதி கூறுகிறேன்....!"

பூங்கோதையின் வழக்கை வேறொரு நீதிபதிக்குமுன் னால் விசாரணைக்கு எடுத்துக்கொள்ள கோர்ட்டாரின் அனுமதியைக் கோருகிறேன்!'

பாரிஸ்டர் பரமானந்தன் என்னுடைய மகன்—இவ் வளவையும் கூறிவிட்டு கூண்டை நோக்கி விரைந்தார். பூங்கோதை கண்களில் கண்ணீர் வழிய "அண்ணா... அண்ணா....!" நாதழதழக்க அழைத்தாள். பரமானந்தனின் விழிகளிலும் கண்ணீர்த்துளிகள் திரண்டன. ஆனால்

அவனுடைய வாயில் புன்னகை நெளிந்தது. பூங்கோதையின் அருகில் சென்று அவள் தலையை அன்புடன் வருடினன். அவன் அணிந்திருந்த கருப்பு அங்கிமேல், அவள் விழிகளிலிருந்து கண்ணீர்ச் சொட்டுக்கள் விழுந்து கொண்டிருந்தன. அதேசமயத்தில் என்னுடைய விழிகளிலிருந்தும் கண்ணீர்த் துளிகள் கீழே விழுந்தன.

அதற்கு மேல் அங்கிருக்க விரும்பவில்லை, இருக்க முடியவில்லை. கைகள் நடுங்க என் பேனவை எடுத்து "ராஜினமா" கடிதத்தை எழுதினேன். என்னுள்ளத்தில் பல்வேறுபட்ட உணர்ச்சிகள் குமுறியெழ, எழுந்தேன். கோர்ட்டிலிருந்த அத்தனை பேரும், அப்போது என்னையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

நான் நீதிபதியாக இருக்கத் தகுதியற்றவன்.... ஆம்..., என்மகன் பரமானந்தன்—இல்லை—பாரிஸ்டர் பரமானந்தன்—சொன்ன அத்தனையும் உண்மை. நீதிபதி சேகர் நான்தான். குணசேகரன் என்ற நான்தான்! செல்லத்தின் காதலனை சேகர். பூங்கோதை என் மகள் தான்.... பரமானந்தன் என் மகன்தான்.......! என் மக்கள்தான்........! இவர்கள் என் மக்கள்தான்........! நான் துரோகி...! நான்....!

நான் பலருக்கு முன்னல் அவமானப் படுத்தப் பட்டேன். என்னுடைய போலி அந்தஸ்து குலைக்கப்பட்டது. என் வாழ்க்கையில் நடந்த கீழ்தரமான—மனிதத் தன்மையற்ற—சம்பவங்கள் அம்பலத்துக்குக் கொண்டு வரப்பட்

டன. இவைகளை எண்ணி நான் துக்கப்படவில்லை; மனம் துடிக்கவில்லை. இப்போது நடந்த சம்பவங்கள் சமூகத்துக்கும், சர்க்காருக்கும் ஒரு பாடம்....! நான் ஒரு எச்சரிக்கை குறி ..! என்னைப் போன்றவர்களை இந்தச் சமுதாயம் தோற்றுவிக்கக் கூடாது என்பதற்கு ஒரு அறிவித்தல். இன்று முதல் நான் ஒரு சாதாரண மனிதன்; நீதிபதி குணசேகரம் பிள்ளையல்ல. 'என் ராஜினமா' எழுதிவிட்டேன். பாரிஸ்டர் பரமானந்தன் என்ன கூறினரோ அத்தனையும் இங்கு நடந்துவிட்டன....!'

இவ்வளவையும் நினைத்துக் கீழே இறங்கி ஓடினேன் பரமானந்தனிடம். அவன் வாய் ஏதோ சொல்ல முயன்றது. ஆனல் வார்த்தைகள் வரவில்லை. அவனை அப்படியே அணைத்துக் கொண்டேன். என்னுடைய இன்னெரு கரம் கூண்டில் நின்ற எனது மகள் பூங்கோதையின் முதுகைத் தடவிக் கொண்டிருந்தது.

## விடுதலை

மகாலிங்கத்தின் வழக்கு, வேருெரு நீதிபதியின் முன்ஞல் விசாரணைக்கு வந்தது. பரமானந்தன் பூங்கோதைக்காக வாதாடினன்.

பூங்கோதையால் மகாலிங்கம் கொல்லப்படவில்லை. என்று அவன் வாதாடினன். அவன் அள்ளி வீசிய ஆதாரங்களுக்கு, முக்கிய சாட்சியான வேலம்மாளின் வாக்கு மூலம் தக்கவாறு உறமூட்டின. பூங்கோதையும் நடந்ததைக் கூறினள். தனக்கும் மகாலிங்கத்துக்கும் நடந்த

போராட்டம் மாடியில் ஒரு அறையில் நடந்து முடிவில் மொட்டை மாடிக்குத் தொடர்ந்து அங்கிருந்து தவறி தலை குப்புற வீழ்ந்தான் மகாலிங்கம். நான் அவனைத் தள்ள வில்லை யென்றாள் பூங்கோதை. மகாலிங்கத்தைக் கொன்ற தாகத் தான் ஏற்கனவே ஒப்புக்கொண்டதற்குக் காரணம், பாரிஸ்டர் பரமானந்தன் சொன்னதுதான் — என்று கூறினாள்.

இதைத்தான், பரமானந்தனும் எடுத்து வாதாடினான் தவிரவும், பூங்கோதைதான் கொலை செய்தாள் என்ப தற்குச் சாட்சியாருமில்லை. எனவே வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. பூங்கோதை விடுதலையானாள்.

"அண்ணா!" என்று கூவிக்கொண்டே கூண்டை விட்டுப் பாய்ந்தாள் பூங்கோதை! "தங்கச்சி..!" என்று அழைத்துக் கொண்டே அவனும் அவளை அணைத்துக் கொண்டான். இந்தக் காட்சியை என் மனைவி இந்திரா வுடன் மகிழ்ச்சி பொங்க பார்த்துக் கொண்டிருந்தேன், செல்லத்தின் — சீதா ராணியின் உண்மையான கணவனாகிய நான்.

**முற்றும்.**

ஸ்ரீ நடராஜா பிரஸ், பழைய போஸ்டாபீஸ் சந்து, துறையூர்.

## கலைச்சோலை நிலையம்

### களிப்புடன் அளிக்கும் செய்தி!

★

தமிழ்நாட்டின் எழுத்து வேந்தர்கள் - சிந்தனைச் சிற்பிகள், அறிஞர்கள் — ஆகியோரின் சிறந்த கருத்தோவியங்களைத் தொடர்ந்து வெளியிட்டுவர ஏற்பாடு செய்திருக்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

★

விவரங்களுக்கு :

## கலைச்சோலை நிலையம்

கடைவீதி - துறையூர் - திருச்சி மாவட்டம்.

உங்கள் சிந்தனைக்கு
எங்கள் அடுத்த வெளியீடு!

இளங்கீரன் தீட்டிய

# தந்தையும் மகளும்

★ ஏழை வறுமையுடன் போராடுகிறான்!

★ விபசாரி ஒழுக்கத்துடன் போராடுகிறாள்!

★ திருடன் சட்டத்துடன் போராடுகிறான்!

★ சீமான் நீதியுடன் போராடுகிறான்!

★ அறிஞன் அறியாமையுடன் போராடுகிறான்!

சமுதாயத்திலே நடக்கும் இப் போராட்டங்களை அழகுறச் சித்தரித்து வாழ்க்கையின் தெளிவான ஒளிப்பதிவாக்கித் தருகிறார் இளங்கீரன்.

விவரங்களுக்கு:
**கலைச்சோலை நிலையம்**
கடைவீதி - துறையூர் - திருச்சி மாவட்டம்

